வால்அும் - சுத்தசலம் என்றமையால் கங்காசலமென்பது பெற்றும். அதற்கு வெண்மை "ஆறெலாங்கங்கையேயாய" என்பதனுலு முணர்க.

---

## ச-வது. நிந்தனைப்படலம்.



## மைதிலியார் இராவணனை நிந்தித்ததைக் கூறுகின்றபடலம்.

இராவணனைச்சொல்லியது.

ருக. நீனிறக்குன்றினெடிதினி னாழ்ந்தநீத்தவெள்ளருவியினிமிர்ந்த
பானிறப்பட்டினமாலையுத்தரியம்பண்புறப்பசும்பொனாரத்தின்
மானிறப்புடவியுடையுறப்பரந்தவளர்கதிரிளவெயில்பொருவச்
சூனிறக்கொண்மூக்கிழித்திடைதுடிக்குமின்னெனமார்பினூறுளங்க.

இ - ள். நீலநிறக்குன்றின் நெடிதினில் தாழ்ந்தநீத்தவெள் அருவியின - கருநிறத்தையுடைய மலையினின்று நீளமாய விழுகின்ற பிரவாகமாகிய வெள்ளிய அருவியைப் போல, நிமிர்ந்த பால் நிறப்பட்டின் மாலை உத்தரியம பண்புஉற - உயர்ந்தபால் நிறமுடைய பட்டினுலாகிய வொழுங்காகிய உத்தரியம் அழகு பொருந்தவும், பசும்பொன் ஆரத்தின் மாலநிறம் - பசும்பொன்னுலாகிய மாலையினது பெருமை பொருந்தியசோதி, புடவி - புவிக்கு, உடை - ஆடையாகியகடலில், உறப்பரந்த வளர்கதிர் இளவெயில் பொருவ - மிகவும் பரவிய வுயர்கின்ற சூரியனது இளவெயிலை யொப்பாகவும, சூல் நிறக்கொண்மூக்கிழித்து இடைதுடிக்கும் மின என மார்பின நூல்துளங்க - கருப்பத்தால் கருநிறமுடைய மேகத்தைக கிழித்ததனிடத்திற்றுவளுகின்ற மின்னலைப்போல மார்பில் பூணூல்விளங்கவும். எ-று. (ரு)

இதுவுமது.

சுo. தன்னிறத்தோடுமாறுதந்திலைமகுடீவியந்தழைபடவுடுத்த
பொன்னிறத்துச்சுருவரைமருங்கிற்றழுவியபுதுவெயில்பொருவ
மின்னிறக்கதிர்ச்சுற்றியபசும்பொன்விரற்றலையவிரொளிக்காசின்
கன்னிறக்கற்றைநெடுநிழல்பூத்தகற்பகமுழுவனங்கவின. (எ)

இ-ள். தன்னிறத்தோடு மாறுதந்து இமைக்கும்-தனதொளியோடு வேறுபாடுசெய்து விளங்குகின்ற, (சரையையுடைய) நீவி அம்தழைபட உடுத்த பொன்னிறத்தூசு-கொய்சகத்தினது அழகுதழைவு தோன்றஅவனுடுத்திய பொன்மயமானவாடை, கருவரை மருங்கில் தழுவிய புதுவெயில பொருவ - கரியமலையினிடத்திற் சூழ்ந்த விளவெயிலை யொப்பாகவும், விரல்தலை - அவனதுகைவிரலகளில, மினநிறக்கதிரில் சுற்றிய பசுமபொன்-மின்னுகின்ற ஒளியையுடைய செஞ்சுடர்போலச் சூழ்ந்தபசும் பொன்னுலாகிய மோதிரங்களின், அவிர் ஒளிக்காசின் கல நிறக்கற்றை-ஒளியுடைய இரத்தினக்கற்களி னொளிதொகுதி, நெடுநிழல்பூத்த கற்பக முழுவனம் கவின - நீண்டவொளியோடு மலர்ந்தகற்பக முழுவனமபோல அழகுசெயயவும. எ-று. (எ)

திரிசடைபிராட்டியாருக்குச்சொல்லியது.

அஅ. இன்னோரனனவெய்தியகாலத்திடைநின்முள
முனனேசொனனேனகணடகனவினமுடிவமமா
பின்னேவாளாபேதுறுவீரேறபிழையெனமுள
அனனேநனறெனமுரவரெலலாமறிவுறமுா (அஉ)

இ-ள். இன்னோர் அன்ன எயதிய காலத்து - இவ்வகை யரக்கியர் அவ்வாறு வந்தபோது, இடை நின்முள - நடுவில்நின்ற திரிசடை, கண்டகனவின் முடிவு-யானகண்ட சொபபனத்தின் முடிவை, முன்னே சொன்னேன்-முன்பே கூறினேன், பின்னே வாளா பேதுறுவீரேல பிழை என்முள் - இப்போது வீணாய் மயங்குவீரேல குற்றமாமெனறு(பிராட்டியை நோககிச்)சொன்னுள், அவரெல்லாம - அவ்வரககிய ரெலலாரும, (திரிசடையைப் பார்த்து) அன்னே நன்று என்முர் அறிவுற்முர் - தாயே நீகண்ட கனவின் றிற நன்றென்று தெரிந்தார். எ-று. (அக)

## ரு-வது. உருக்காட்டுப்படலம்.

:o:

## அனுமான் தனது விசுவரூபத்தைப் பிராட்டிக்குக் காட்டியதைக் கூறுகின்றபடலம்.



ஸ்ரீராமபிரானது திருவடிகளைக் கூறியது.

சா உ. சேயிதழ்த்தாமரையென்றுசேனுளோர
ஏயினரதனாலுணையெளியதில்லையால
நாயகன்றிருவடிகுறிததுநாட்டுறின
பாய்திரைபபவளமுங்குவளைப்பணபினும். (ரு க)

இ-ள். பாய்திரைப் பவளமும் குவளைப்பண்பின் ஆம் - பரவுகின்ற அலையில மிதக்கின்ற பவளமும குவளைமலரினது பண்புடையதாம, (ரு க)

திருவடியின செவப்பைநோக்கின் பவளம் குவளையாகுமென்பது கருத்து.

பெருமாளதுதுயரத்தைப் பிராட்டிக்குஆஞ்சநேயாசொல்லியது.

சா ரு. போதாயினபோதுனதண்புனலாடலபொய்யோ
சீதாபவளககொடியனனவட்டேடியெனகண்
நீதாதருகிறறிலையேனெருபபாதியென்றுக
கோதாவிரியைசசினநகொணடனனகொணடலொப்பான. (அரு)

இ-ள் போது ஆயினபோது-சூரியனுதயமானகாலை, சீதா-சீதை வந்து, உனதண்புனல் ஆடல பொயயோ-உனது குளிர்ந்த புனலில் நீராதத மாடல் பொய்யோ, பவளக்கொடி அன்னவள தேடி எனகண் நீதா-பவளக கொடியையொத்த அச்சீதையை நாடி யென்னிடத்தில நீகொடு, தருகிற்றிலையேல் நெருப்பு ஆதி என்று - கொடுத்திலையேல் எனது வாளியால் நெருப்பாதியென்று. (அ௬)

இதுவுமது

சா சா. உணடாயதுமுறறதுமுறறுமுணாததியுள்ளம்
புணடானெனநோயுறவிமமுறுகினறபோழ்தின
எணடாணிழநதிட்டனனேநிழையாஙகளகாட்டக
கண்டாலுயாவேதமுமபோதமுஙகாண்கிலாதான். (கo)

இ-ள். உயர்வேதமும் போதமும் காண்கிலாதான் - பெருமைபொருந்திய வேதங்களாலும் ஞானத்தாலுங்காணக்கூடாத எம்பெருமானை, உண்டாயதும-திருவயோத்தியில் கைகேசியால் வந்ததையும், உற்றதும - வனத்தில் மானால் வந்ததையும், முற்றும் உணர்த்தி - முழுதுஞ் சொல்லி, உள்ளம் புண்தான என நோய் உற விம்முறுகின்ற போழ்தின்-மனம புண்தானே யென்று சொல்லும்படி வருத்த மிகுதியாகத் துக்கப்படுகிற காலை, எண் இழந்திட்டனன்-நினைவையிழந்து, ஏந்து இழையாங்கள் காட்டக்கண்டான்-நீ பூண்டிருந்த ஆபரணங்களை யாங்களெடுத்துக் காட்டப்பார்த்தான். (கூ0)

இதுவுமது

கூரு. தணிகின்றநஞ்சொற்றொடர்த்தன்மையதன்மைதன்னைத்
துணிகொண்டிலங்குஞ்சுடர்வேலவன்றூயநின்கண்
அணிகண்டுழியேயமுதந்தெளித்தாலுமாறப்
பிணிகொண்டதுபண்டதுண்டாயினும்போப்பதன்றே. (கூக)

இ-ள். தணிகின்ற நம்சொல் தொடர்தன்மை - தாழ்ந்து சொல்லுகின்ற எங்கள் சொல்லைக்கேட்கின்றமையால், அத்தன்மை தன்னைத் துணிகொண்டு - அத்துக்கத்தைப் போக்கிக்கொண்டு, இலங்கும் சுடர்வேலவன் - விளங்குகின்ற வொளியையுடைய வேலாயுதத்தை யுடைய பிரான், தூயநின்கண் அணி கண்டுழி - பரிசுத்தமாகிய வுன்னிடத்திருந்த ஆபரணங்களைப் பார்த்தபோது, அமுதம் தெளித்தாலும் ஆறா - அமுதத்தைத் தெளித்தாலுந் தீராத, கொண்டது - கொண்டதாகிய, பிணி-நோய், பண்டது உண்டாயினும போப்பது அன்று-பழையதாயுண்டாயினும் போகத்தக்கதன்று. எ-று. (கூக)

## சா-வது. சூடாமணிப்படலம்.

### பிராட்டி தான் வைத்திருந்த சூடாமணியை அநுமானிடம் கொடுத்ததைக் கூறுகின்ற படலம்.

பிராட்டியநுமானுக்கடையாளங்கூறியது.

சாசா. வந்தெனைக்கரம்பற்றியவைகலவாய்
இந்தவிப்பிறவிக்கிருமாதரைச்
சிந்தையாலுந்தொடேனென்றசெவ்வரம்
தந்தவார்த்தைதிருச்செவிசாற்றுவாய். (கூஉ)

இ-ள். வந்து என்னைக்கரம்பற்றியவை கல்வாய்-மிதிலாபுரி வந்து என்னை மணம்புரிந்தநாளில், இந்த இப்பிறவிக்கு இருமாதரை - இந்த அவதாரத்திற்கு நினையன்றி யிரண்டாவது பெண்ணை, இந்த வவதாரத்திற்கு நினை யன்றி பெரியபிராட்டிபூப்பிராட்டி என்னு மிரண்டு பெண்களை என்பாருமுளர். பெரியபிராட்டியே யிவளாகலின அதுபொருந்தாது. (௩௪)

இதுவமது.

௬௭. எந்தைநின சரணஞ்சரணென்றவிதனாலே
முந்துநின குறையும பொறைதந்தனம் முந்துன
சந்தமொன்றுகொடித்திரள கண்கடமக்கே
வந்தொர் நன்மணி நிற்கென வைத்ததும வைப்பாய். (௮௧)

இ-ள். எந்தை நின சரணம - எனதையனே யுனதுபாதமே, சரண் என்ற இதனால் - புகலிட மென்றவிந்தச் சொல்லால், முந்துநின் குறையும பொறைதந்தனம் - முனபு நீசெய்த உனதுகுற்றத்தையும பொறுத்தோம, முந்து - நீ இக்குற்றத்தைச் செய்ததற்கு முனபு, உன் சந்தம ஒன்றுகொடித்திரள் கண்கள் தமக்கு-உனது வடிவைப்பொருந்திய காக்கைக்கூட்டங்களினிரண்டு கண்களுக்கும, ஓர் நல்மணி வந்து நிற்கென வைத்ததும் வைப்பாய் - ஒருநல்ல கணமணி வந்து நிற்கவென்று நியமித்ததையுஞ் சொல்லுவாய. (௮௧)

## எ-வது. பொழிலிறுத்தபடலம்.



## அனுமான் அசோகவனத்தை யழித்ததைச் சொல்லுகின்றபடலம்.

௩௮. பாடலம படர்கோங்கொடும பண்ணிசைப
பாடலம பணிவண்டொடும் பஃறிரைப
பாடலம புயர்வேலையிற பாய்ந்தன
பாடலம பெறப்புள்ளினம பாறவே (௩௧)

இ-ள். படா கோங்கொடும - படர்ந்த கோங்க மரங்களோடும், பண் இசைப்பாடல் அம் பணி வண்டொடு - பாடுகின்ற

இசைப்பாடலும் அழகுங் குளிர்ச்சியு முள்ள வண்டுகளோடும், பாடலம் - பாதிரி மரங்கள், பாடலம் பெற - (கடல்நீர்) சிவந்த நிறத்தைப் பெறவும, புள இனம் பாற - தமமிடத்துள்ள பற வைக கூட்டஙகளோடவும, பல திரைப்பாடு அலமபு உயர் வேலேயில் பாயந்தன - பல அலைகள் பககமெல்லாந் ததும்புகி ன்ற வுயர்ந்த கடலில விழுநதன. எ-று (௩௧)

௬௯. வணடலமபுநலாறறினமராமரம
வணடலம்புனலாற்றினமடிநதன
விணடலமபுகநீஙகியவெணபுனல
விணடலமபுகநீணமரமவீழநதவே. (௩௨)

இ-ள். வணடு அலம்பு நல ஆற்றின மராமரம - வண்டுக ளொலிககின்ற நல்லொழுககினை யுடைய கடப்ப மரங்கள்,வண் டல் அம் புனல ஆற்றில மடிநதன - சேற்றையுடைய வழுகிய நீராறறில் விழுந்து மடிந்தன, விண்தலமபுகநீள மரம் - ஆகா யத்தை யணுகவளாந்த மரஙகள், விண்டு - திருமாலினது திரு வடியை, அலம்பு - மஞசன மாட்டிய, உகம நீஙகிய வெண்பு னல் - பலயுகஙகளைக கடநத ஆகாயககஙகையில், வீழ்ந்த - விழு ந்தன, எ-று. (௩௨)

எ0. தாமரைததடம்பொய்கைசெஞசநதனம
தாமரைதநனவொத்ததுகைததலின
காமரககளிவணடொடுஙகளளொடும்
காமரககடலபூககடல்கணடவே. (௩௩)

இ - ள். தடம் - பெரிய, தாமரைப் பொய்கை - தாமரைக் குளங்கள், செம் சந்தனம் தாம அரைத்தன ஒதத-சிவந்தசந்த னங்களை யரைததுக குழப்பின போலாயின, துகைத்தலின்- அனுமான் திருவடிகளாற்றுகைத்தலால், கா - அசசோலேயிலு ளள, மரககடல் - மரஙகளாகிய கடல்கள், காமரக்களிவண்டொ டும கள்ளொடும் - இசைப்பாட்டையும் மயககததையு முடைய வண்டுகளோடுந் தேனொடும, பூக்கடல்கண்ட - மலர்க்கடலேச் செய்தன. (௩௩)

எக. சிந்துவாரநதிசைதொறுஞசென்றன
சிநதுவாரமபுரைதிரைசோநதன
தந்துவாரமபுதவொடுதாளறத்
தந்துவாரநதுகளபடச்சாய்நதவே. (௩௪)

இ-ள். திசை தொறும் சென்றன - அசசோலையினின்று திசைகள்தோறு நீண்டனவாகிய, சிந்துவாரம் - நொச்சிமரங்கள், சிந்து - கடலினது, வாரம் - கரையிலும், புரைதிரை-உயர்ச்சியுடைய அலைகளிலும், சேர்ந்தன - சார்ந்தன, தந்து-அனுமாறு லெறியப்பட்டு, வார் அமபுதவொடு தாள் அற - நீண்ட அழகியகதவொடு தாளற்று, தம்துவாரம் துகள் படச்சாயந்த-அவ்வரக்கருடைய வாயிலகள துகளாக அழிந்தன எ-று. (௩௪)

௭௨. நந்தவானத்துநாணமலாநாறின
நந்தவானத்துநாண்மலாநாறின
சிந்தவாநந்திரிந்துகச்செமமணி
சிந்தவானந்திரிந்ததிரைககடல. (௩௫)

இ-ள். நந்தவானத்து - அவ்வசோக வனத்தில், நாள்-தினந்தோறும், நாறின - பூத்த, மலா - மலர்கள், நந்த-அதிகமாக, வானத்து - ஆகாயத்திற் சென்று, மலா-அங்கு விளங்குகின்ற, நாள் - நக்ஷத்திரங்களைபபோல, நாறின - விளங்கின, சிந்து - நீரைப்பெய்கின்ற, அவ்வானம - அமமேகங்கள், திரிந்து உக-காற்றாற் சுழன்று சிதற, செமமணி சிந்த - செவ்வையானமுத்துக்களைப் பெறுவதறகு, வால் நந்து - வெள்ளிய சங்கங்கள், திரைக்கடல் இரிந்த - அலையையுடைய கடலுள அஞ்சியோடின. எ-று. (௩௫)

---

## ௧௦-வது. பஞ்சசேனாபதிகள்வதைப்படலம்.

படையெழுந்ததைசசொலலியது.

௭௩. பண்மணிககுலம்யானையினபுடைதொறுமபரநத
ஒணமணிக்குலமழையிடையுருமெனவொலிபபக
கணமணிக்குலஙகனலெனககாநதுவகதுபின
தண்மணிககுலமழையெழுகதிரொனதததைப்ப. (௧௩)

இ-ள். யானையின் - யானைகளின் கழுத்திலணிந்த, பண்மணிக்குலம் - தகுதி யுடைய மணிக்கூட்டமும், புடைதொறும் பரந்த ஒண்மணிக்குலம் - இருபுறத்திலும பரந்த வொள்ளிய மணிக்.கூட்டமும், மழை இடை உரும் என ஒலிப்ப - மேகத்தி

னிடத்தி லிடியைப்போல வொலிக்க, கண்மணிக் குலம் கனல் எனக்காந்துவ - அவ்யானைகளின் கண்மணிக் கூட்டங்கள் நெருப்பைப்போலக் காந்துவனவாய், கதுப்பின தண்மணிக்குலம்- இருகவுள்களிலும் ஆபரணமாயணிந்த குளிர்ந்த இரத்தினக் கூட்டங்கள், மழை எழுகதிர் எனத்ததைப்ப - மேகத்தி லெழுகின்ற சூரியனைப்போல வொளிசெய்ய. எ-று. (௧௩)

படைவீரருரைகூறியது.

எச. இந்திரனிசையிழந்தேகுவானிகந்
தந்திமுன கடாவினன முடுகத்தாமந்ன
மந்தரவாலடி பிடித்துவலலேயல
உந்துதிநீயெனவலிநதுறறநதார (உச)

இ-ள். இந்திரன் இசை இழந்து ஏகுவான் - இந்திரன்றனது புகழை யிழந்து செலவானகி, இகல தந்திமுன் கடாவினன் முடுக - வலியுடைய ஐராவதத்தை முனனே செலுத்தி விரைந்துபோக, மந்தரம் – மநதரமலைபோன்ற, அதன் - அவ்யானையினது, அடிவால் பிடித்து - அடிவாலைப்பற்றி, வல்லேயேல் - வல்லையாயின், நீ உந்துதி என வலிநத் ஊற்றத்தார்-நீசெலுத்துதியென்று காய்ந்த வலியுடையார். எ-று (உக)

இதுவுமது.

எரு பானிறுகதந்தணை பணியனாகினின
கோனினைததிலனெனவுலகங்கூறலும
நீனிறததிராவணனமுனிவுநீககுவான
காலனைககாலினிறகையிறகட்டினா (உஉ)

இ-ள். பால் நிறுத்து அந்தணன பணியனாகி - முறையே உயிர்களைப படைக்கின்ற பிரமனுடைய ஆணைபெற்றவனாய், நின்கோல் நினைத்திலன என உலகம கூறலும் - (நமன்) உனதுத்தரவைக கொண்டிலனென்று இலங்கைநகரார் சொல்லுதலும், நீல்நிறத்து இராவணன் முனிவு நீக்குவான்-கறுப்பு நிறத்தையுடைய இராவணனது கோவத்தைப்போக்குவதறகு, காலனைக்காலினில் கையில் கட்டினார் - யமனைக்காலிலுங் கையிலுங் கட்டிக்கொணர்ந்தார். எ-று, (உஉ)

## ௧௧ - வது. அட்சகுமாரன் வதைப்படலம்.



அட்சனை இராவணனுக்குச சொல்லியது.

௭௬. துண்டத்தூணதனிறதோன்றுங்கோளரிசுடர்வெண்கோட்டு
மண்டொத்தநிமிராண்கேழலாயினுமலைதலாற்று
தண்டத்தைக்கடந்துபொங்கியப்புறத்தகலினப்பால
தண்டத்தையிடுதியன்றேநினவயிற்றந்திலேனேல. (௫)

இ - ள். துண்டத்தூண் அதனில் தோன்றும் கோளரி-மரத்தின் துண்டாகிய தூணிலவதரித்த நரசிங்கமும், சுடா வெண்கோட்டு மண்தொத்த நிமிர் ஆண்கேழல் ஆயினும்-ஒளியுடைய வெள்ளிய கொம்பில பூமி தங்கியிருக்க உயர்ந்த (திருமாலவதாரமாகிய) ஆண்பன்றியாயினும், மலைதல்ஆற்று - என்னோடு பொருதலைசசெய்யா,தண்டத்தைக்கடந்துபொங்கி அப்புறத்து அகலின் - இந்நாட்டைக்கடந்தோங்கியப்பாலக்குரங்கு செல்லினும, நினவயின தந்திலேனேல்-(அதைபபிடத்து) நின்னிடங்கொண்டுவந்திலேனாயினும, என்பால் தண்டத்தை இடுதி-எனக்குத்தண்டம் விதிப்பாய. எ - று. (௫)

௭௭. நீத்தத்தாயோடினவுதிரப்பெருநதிநீராகசசிலைபாராகப் [காமுன்
போய்த்தாழ்செறிதசை யரிசிந்தினபடிபொங்கபபொருமுயிர்போ
மீத்தாங்கிமிர்சுடாவயிரக்கைகொடுபிடியாவிண்ணொடுமண்காணத்
தேய்த்தானூழியினுலகேழ் தேயினுமொருதனபுகழிறைதேயாதான.

இ-ள் ஊழியின்உலகு ஏழ்தேயினும ஒருதன்புகழ் இறைதேயாதான் - யுகமுடிவிலேழுலகங்களுந் தேயினு மொப்பற்றதனதுபுகழ் சிறிதுந் தேயாத அனுமான், நீத்தாயஓடின உதிரப்பெருநதி நீராக - நீத்தாயோடிய வுதிரமாகிய பெரியநதி புனலாகவும, சிலைபாராக - அமமிககல் புவியாகவும், போய்த்தாழ் செறிதசை அரிசிந்தினபடி பொங்க - நீண்டு தங்கிய அட்சகுமாரனது தசை அரிசிகளைவைத்தபடி மேனமேற்கு வியவும், பொரும்உயிர் போகாமுன்-போர்புரிந்தவுயிர் போகாமுன், மீத்தாங்கிமிர்சுடர் வயிரக்கை கொடுபிடியா - மேலே தாவுகின்ற அதிககாந்தியுள்ள வலியுடைய கைகளால் அவ்வட்சனைப்பிடித்து, விண்ணொடு மண்காணத் தேய்த்தான் - விண்ணுலகத்தாரொடு மண்ணுலகத்தார்காணத் தேய்த்தான். எ-று. (௯௮)

எஅ. கதிரெழுந்தனையசெந்திருமுகக்கணவர்மா
டெதிரெழுந்தடிவிழுந்தழுதுசோரிளநலார்
அதிநலங்கோதைசேரோதியோடன்றவ்வூர்
உதிரமுந்தெரிகிலாதிடைபரந்தொழுகியே. (சங.)

இ-ள். சூரியன்உதயமானாற்போலிருக்கின்ற(இரத்தத்தால்) சிவந் தழகுள்ளமுகங்களை யுடைய நாயகரிடத்தில், முன்செ ன்று அந்நாயகர் காலின்மேல விழுந்து அழுது சோர்கின்ற இளம்பெண்க ளுடைய, மிகுந்த வழகுள்ள பூமாலைசூட்டிய கூந்தலோடு, அன்று அவ்வூரிற் சிதறிய இரத்தமு மிடங்களிற் பரவி நீண்டு (வேற்றுமை) தெரியாது. எ-று. (சங)

எகூ. ஓடினாருயிர்களைநாடுடலங்கள்போலுதவியால்
வீடினார்வீடினார்மிடையுடற்குவைகள்வாய்
நாடினார்மடநலார்நவையிலாநண்பரைக்
கூடினாரூடினாரும்பர்வாழ்கொம்பனார். (சரு)

இ-ள் உயிர்களை நாடு உடல்கள்போல் - உயிர்களைத்தேடு கின்ற உடம்புகளைப்போல, வீடினார் மிடை உடல் குவைகள் வாய் - இறந்தவீரர்களுடைய நெருங்கிய வுடற் குப்பைகளினி டத்து, ஓடினார்-அரகங்களோடி, உதவியால் வீடினார் - அவ்வீர ர்கள் செய்த பேருதவியை யெண்ணித் தாமு மிறந்தார், மடந லார்-அவ்வாறிறந்த விளமபெண்கள், நவையிலா நண்பரை-வீரத் திற்குற்றமில்லாத தந்நாயகரை, நாடினார் கூடினார் - விண்ணிற் றேடிக்கூடினார், உம்பர் வாழ் கொம்பனார் ஊடினார் - அவ்விண் புக்கவீரரொடுவாழ்கின்றதெய்வமகளிர் அவ்விளமபெண்களோ டுபிணங்கினார். எ - று. (சரு)

அ௦. ஏந்தினாடலையையோரெழுதருங்கொம்பனாள்
காந்தனின்றாடுவானுயர்கவந்தத்தினை
வேந்தனீயல்லசினையவிடுதியானடமெனப்
பூந்தளிர்க்கைகளானமெய்யுறப்புல்லினாள். (சஎ)

இ - ள். எழுத அரும் ஓர் கொம்பு அன்னாள் - எழுதப்ப டாத பூங்கொம்பைப் போன்ற வொருத்தி, தலையை ஏந்தினாள்- அற்றதலையைக் கையிற்கொண்டு, நின்று ஆடுவான் - நின்றாடு கின்ற, காந்தன் - தன்கணவனுடைய, உயர்கவந்தத்தினை - நீண்

டவுடலைப்பார்த்து, வேந்தன் நீ அலசினாய் விடுதி நடம் எனு- அரசனே நீயாடியிளைத்தா யினியாடுதலை விடுதியென்று, பூந்த ளிர்க்கைகளால் மெய்உறப்புல்லினாள் - அழகிய தளிர்போன்ற கைகளால் அதததலையை யவனுடலிற் பொருந்தச் சேர்த்தாள். எ - று. (௭௭)

---

## ௪௨ - வது. பாசப்படலம்.

:0:

## இந்திரசித்து அனுமானைப் பாசத்தாற் கட்டியதைக் கூறுகின்றபடலம்.

அக. குரககுநலவலஙகுறைந்ததெனருவலஙகொடடி
இரைககுமாநகரெறிகடலொததெம்மருங்கும்
திரைககுமாசுணம்வாசுகியொததுதேவர்
அரக்கரொததனர்மநதரமொததனனனுமன. (௬௧)

இ-ள். இந்தக்குரங்கு மிகுந்தவலி நீங்கிற்றென்று கருவத் தால்தோள்களைகொட்டி, ஒலிக்கின்ற இலங்காபுரி அலையை வீசுகின்ற கடலையொத்தது, எவ்விடத்திலுஞ் சூழ்ந்திருக்கின்ற அம்பாகிய பாம்பு வாசுகியென்னும் பாம்பையொத்தது, அரக் கர் தேவரை யொத்தார் அநுமான் மந்தரகிரியை யொத்தான். எ - று. (௬௧)

அஉ. கறுத்தமாசுணங்கனகமாமேனியைக்கட்ட
அறத்துக்சாங்கொருதனித்துணையாநினறவனுமன
மறத்துமாருதமபொருதநாளவாளராவரசு
புறததுச்சுறறியமேருமாலவரையையும்போனறான். (௬௨)

இ-ள். கருநிறமுள்ள அப்பாம்பு பொன்மயமான பெருமை பொருந்திய திருமேனியைகட்ட, தருமத்துக்காங்கொரு ஒப்பற்ற துணையாய நின்ற அநுமான், உதிரத்தோடு பெருங் காற்று வீசியபோது ஒளியுடைய ஆதிசேடன், சுற்றிலுஞ் சுற் றிய மேருவாகிய பெரிய மலையையு மொத்தான். (௬௨)

---

# கரு-வது. பிணிவீட்டுபடலம்.

## அனுமானைக் கட்டுநீக்கியதை யோதுகின்றபடலம்.

இராவணனைக்கூறியது.

அரு. குவித்தபன்மணிக்குப்பைகள்கலையொடுங்கொழிப்பச
சவிச்சுடர்க்கலனணிந்தபொற்றோளொடுதயங்கப
புவித்தடம்படர்மேருவைப்பொன்முடியென்னக்
கவித்துமாலிருங்கருங்கடலிருந்ததுகடுப்ப. (சஉ)

இ-ள். குவித்த பல்மணிக்குப்பைகள - கூட்டியமைத்திருக்கின்ற பலவித ரத்நக்கூட்டங்கள், கலையொடும கொழிப்ப-உத்தரியத்தொடு மொளியை வீச, சவிச்சுடர்க்கலன் அணிந்த பொன் தோள் தயங்க-சூரியப்பிரகாசமான ஆபரணங்களை யணிந்த வழகிய தோள்கள விளங்க, புவித்தடம் படர் மேருவைப் பொன்முடி என்ன - புவியில் விசாலமாய்ப் பரவிய மேருமலையை யழகிய மகுடமாக, கவித்து மால் இரும் கருங்கடல் இருந்தது கடுப்ப - சூட்டிக்கொண்டு மிகப்பெரிதான கரியகடல் வீற்றிருந்ததை யொப்பாக. எ-று ஒடு இசைநிறை. (சஉ)

இதுவுமது.

அச. வண்மைக்குந்திருமறைகட்கும்வானினும்பெரிய
திண்மைக்குந்தனியுறையுளாமுழுமுகந்திசையின
கண்வைக்குந்தொறுங்களிற்றொடுமாதிரங்காக்கும
எண்மர்க்குமற்றையிருவர்க்கும்பெரும்பயமியற்ற. (சச)

இ-ள். வண்மைக்கும - புகழ்க்கும், திருமறைகட்கும்-சிறந்த வேதங்களுக்கும், வானினும் பெரிய திண்மைக்கும் - ஆகாயத்தினும் பெரியவலிக்கும், தனி உறையுள ஆம் முழுமுகம்-ஒப்பில்லாத விருப்பிடமாகிய நிறைவுள்ளமுகம, திசையிலகண்வைக்கும் தொறும் - திசைகளைப் பார்க்குந் தொறும, (சச)

இதுவுமது.

அரு. திங்கள்வாணுதன்மடந்தையர்செய்யரிக்கிடந்த
அங்கயற்றடந்தாமரைக்கலரியோனுகி
வெங்கணவானவர்தானவரெனறிவர்விரியாப்
பொங்குகைகளாந்தாமரைக்கிந்துவேபோன்று. (ருச)

இ-ள். பிறைபோன்ற ஒளி பொருந்திய நெற்றியையுடைய மகளிரது செவ்வரிகள் தங்கிய, அழகுடைய கண்ணுகிய கெண்டைமீன்களுள்ள முகமாகிய தாமரைமலாகளுககுச சூரியனுகி, தன்மேல் கொடுமையுள்ள தேவாகளும தானவர்களுமென்று சொல்லப்படுகின்ற விவாகளது விரியாமற் குவிந்துகொண்டிருக்கின்ற, மிகுதியான கைகளாகிய தாமரைமலர்களுக்குச் சநதிரனையொதது. எ-று. (ருச)

அனுமானநினைநதுதைதககூறியது,

அசு. மாடிருந்தமறியணபுணாமஙகையாயமஙகை
ஊடிரிந்திடமுடிகநதலைதிசைதொறுமுருட்டி
ஆடலகொணடுநினருாககளறநதுகொடிதமமா
தேடிவநதோாகுரஙகெனுமவாசகஞ்சிறிதோ (ருஅ)

இ-ள். தேடி ஓா குரஙகுவநதது என்னும வாசகம் சிறிதோ-பிராட்டியைததேடி யொருகுரஙகுவந்ததென்று சொல்லுகின்ற வார்தகை சிறிதாமோ, பெரிதேயாம, (ருஅ)

இராவணனஅனுமானுககுசசொலலியது.

அஎ. உஙகுலததலைவனறனஞெடாபயிலாவுயர்ச்சியோனை
வெஙகொலையமபிறகொனருறகாட்டொழினமேறசொணடோல
எஙகுலபபுறுநுஞ்சீாததிறுமமொடுமியைநதெனருல
மஙகுலிறபொலிநதஞாலமாதுமையுடைததுமாதோ. (அஅ)

இ-ள். நும் சீர்த்தி எங்கு உலப்புறும்-உமதுகீர்தகி எங்கு முடிவுபெறும், நும்மொடும் இயைநதது என்றால் - இப்பழிச் செய்கை உம்மோடு கூடிறறெனருல, (அஅ)

அநுமானஇராவணனுககுசசொல்லியது.

அஅ. பாரைஞ்ஞூறுவபறபலபொறபுடம
ஈரைஞ்ஞூறுதலையுளவெனனினும
ஊரைஞ்ஞூறுகாகடுங்கனலுடபொதி
சீரைஞ்ஞூறவைசேமஞசெலுததுமோ. (கoஉ)

இ-ள். ஊரைஞாறும் கடுங்கனல உள்பொதி-ஊரையழிக்கின்ற கடியநெருப்பை யுள்ளேகொண்ட, சீரைஞாறு - நாறு சிலையாயினும், அவைசேமம் செலுத்துமோ-அச்சிலைகள் வெந்தொழியாமல் தம்மைக்காத்துக்கொள்ளுமோ (அவ்வாறு) பா

ரை நூறுவ பற்பலபொன்புயம - புவியையழிப் பனவாகிய அநேக தோள்களும், ஈர் ஐஞ்ஞூறு தலை உள என்னினும் - ஆயிரந்தலைகளுமுள்ளவாயினும், அவையென்செய்யும. எ-று. (௧௦௨)

௮௧. தன்னிறைக்குறுகணவெய்யோாதாமியற்றலுங்கேட்டினனே
அனனவாகக்கிறுதியாகவணிநகரழிப்பலெனறுச
செஙகிறச்சிகையவெமபோர்மழுப்பினனாசசேறலொக்கும
அனனிறததணணறூதனனல்செழுகொறறீளவால (௧௩௬)

இ-ள். தன் இறைக்கு உறுகண் வெய்யோா இயற்றலும் கேட்டு - தன்னிறையாகிய சிவனுக்குக் கைலையைப் பிடுங்குதல் முதலிய துன்பங்களை யரக்கர்கள செயதலுங்கேட்டு, இன்னே அன்னவர்க்கு இறுதி ஆக அணிநகர் அழிப்பல் எனறு - இப்போதே அவ்வரக்கர்களுக்கு முடிவுண்டாக வழகிய விலங்கையை யழிப்பேனென்று, செமகிறச்சிகைய வெமபோா மழுப பின்னர்ச் சேறல் ஒக்கும - சிவநதநிறமுடைய சுவாலைபொருந்திய வெவ்விய வலியுடைய மழுவாயுதம் அவ்வனுமானுக்குப் பின்னர்ச் செலலுதலையொக்கும. எ-று (௧௩௬)

---

## ௧௪-வது. இலங்கையெரியூட்டுபடலம்.



### இலங்கையைக்கொளுத்தியதைக் கூறுகின்றபடலம்.



௯௦. பேயமனறினினினறுபிறங்கெரி
மாயருணடநறவுமடுததால
தூயரொனறவர்வைகிடநதுனனிலல
தீயரன்றியுநதீமையுஞ்செயவரால. (௧௪)

இ-ள். பேய - பசாசுகள் சூழ்ந்துள்ள, மன்றினில் நின்று பிறங்கு எரி - பொதுசசாலைகளில நிலைகொண்டு எரிகின்ற நெருப்பு, மாயர்-மாயையையுடைய வரக்கர், உண்ட நறவும் மடுத்தது - உண்ட மிச்சிலாகிய கள்ளையுங்குடிததது, தூயரொன்றவர் - தூய்மையுடையோர், வைகு இடம் துன்னிலல - தீயர் வதியுமிடத்தைச் சார்ந்தால், தியா அன்றியும் தீமையும் செய்

வர் - (அவர்போல) தீயராவரன்றியுங் கொடியபாபங்களையுஞ் செய்வர். எ-று. (௧௪)

௧௧. பரிதிபற்றிநிமிர்ந்தெழுமைங்கனல
கருகிமுற்றுமெரிந்தெழுகாரமழை
அருகுசுற்றுமிருந்ததையதாயதின
உருகுபொற்றிரளொத்தனனொண்கதிர். (௨௨)

இ-ள். பரிதிபற்றி நிமிர்ந்து எழுமைங்கனல் - சூரியனைத் தொடர்ந் துயர்ந்தெழுகின்ற பசுமையான நெருப்பால், கருகி முற்றும் எரிந்து எழுகார்மழை-தீய்ந்து முழுதும வெந்தெழுகின்ற கரியமேகங்கள், அருகுசுற்று மிருந்ததையதாய - பக்கமெல்லாஞ் சூழ்ந்திருக்கின்ற கரிகளாக, அதின் - அக்கரியுள், உருகு பொன்திரள் - உருகுகின்ற பொறகட்டியை, ஒண்கதிர் ஒத்தனன்-ஒளியுடைய சூரியனொத்தனன். எ-று. (௨௨)

௧௨. தலைகொளுத்தியதாவெரிதாமணி
முலைகொளுத்திமுகத்திடைமொய்த்தபோ
உலைகொளுத்தவுலந்துலைவுற்றன
வலைகுளம்பின்மணிநிறவாசியே. (௨௩)

இ-ள். தலை கொளுத்திய தா எரி - பின்காற் கயிற்றைக் கொளுத்திய தாவுகின்ற நெருப்பு, தாமணி முலைகொளுத்தி-கழுத்துக்கயிற்றையுங் கட்டுமுளையையுங் கொளுத்தி, முகத்திடை மொய்த்தபோ உலைகொளுத்த - முகத்தில் நெருங்கிய மிகுந்த பிடரி மயிரைககொளுத்த, வலைகுளம்பின் மணி நிறவாசி-வலைந்த குளம்பினையுடைய வழகிய நிறமுள்ளகுதிரைகள்,உலந்து உலைவுற்றன - வருந்திச செத்தன. (௨௩)

௧௩. அகருமஞ்ஞுறுஞ்சாந்தமுமுதலியவநேகம்
புகரினன்மரத்துறுவெறியுலகெலாமபோர்ப்பப
பகருமூழியிற்காலவெங்கடுங்கனல்பருகும்
மகரவேலையினவெந்தனநந்தனவனங்கள். (௨௪)

இ-ள். அகரும் அந்நறும் சாந்தமும் முதலிய அனேகம்-அகில் மரங்களும அந்த நலலவாசமுள்ள சந்தன மரங்களும் முதலிய பலவகைகளாகிய, புகரில் நல்மரத்து உறுவெறி உலகு எல்லாம் போர்ப்ப - குற்றமில்லாத நல்லமரங்களிற்பொருந்திய வாசம் உலகமுழுதுங் கவிய, பகரும் ஊழியில் காலவெம்கடும்

கனலபருகும் - சொலலுகின்ற யுகமுடிவில் வெவ்விய காலாக்கி னியால் குடிககபபடுகிற, மகரவேலையில் - மகரமீன்களுள்ள கடலைப்போல, நந்தனவனஙகள் வெநதன - சோலைகள் வெந்தன

௧௪. வெருளுமவெமபுகைப்படலையின்மேறசெலவெருவி
இருளுமவெஙகடலவிழுநதனவெழுந்திலபறவை
மருளினமீனகணமவிழுஙகிடவுலநதனமனததோா
அருளிலவஞசரைத்தஞசமெனறடைநதவரனைய. (௩௭)

இ-ன். வெருளும் வெமபுகைபபடலையின - பயப்படத்தக்க வெவ்விய புகைபபடர்ச்சியால, மேற்செல வெருவி - ஆகாயத் திறசெலல வஞசி, இருளும வெமகடல் விழுநதன எழுநதில பறவை - இருணடிருககினற வெவவியகடலில விழுநதெழுந் திலவாகிய பறவைகள், மனதது ஓா அருள இல் வஞசரைத் தஞசமென்று அடைந்தவா அனைய - மனத்தி லொருவகை யிரககமிலலாத வஞசாகளைத் தமக்காதாரமென்று சாாநதவர்களை யொபபாக, மருள் இல மீன கணம விழுஙகிட உலநதன-மயகக மிலலாத மீன கூடடஙகளை விழுஙகமாயநதன. எ-று. (௩௭)

---

## கரு-வது. திருவடிதொழுதபடலம்.



## அனுமான் ஸ்ரீராகவபிரானது திருவடிகளைத் தொழுததைச் சொல்லுகின்றபடலம்.

---

௧௫. மைநநாகமெனனனினறருனறையுமாபினெயதிக
கைநநாகமனையோாறறதுணாநதினனகணததினகாலைப
பைநநாகநிறகுமவீராசனனெடுவரவுபார்ககும
கொய்நநாகநறுநதேனசிாதுஙகுனறிடைகுதியுங்கொணடான. (௧)

இ-ன். பைநாகம் நிற்கும் வீரர் - படமெடுத்து நிற்குஞ் சர்ப்பம்போலத தலையெடுததுப் பார்தது நிற்கின்ற அஙகதன முதலியோர்,

௧௬. கண்டனெனகறபினுக்கணியைக்கண்களால
தெண்டிரையலைகடலிலஙகைததென்னகா
அணடர்நாயகவினித்துறததியையமும்
பண்டுளதுயருமென்றனுமன்பன்னுவான்.

இ-ள். தெண்திரை அலைகடல் இலங்கைத் தென் நகர் - தெள்ளிய அலைகளையுடைய கடல் சூழ்ந்த இலங்கையாகிய வழகிய நகரில், கற்பினுக்கு அணியை - கற்பினுக் காபரணமாகிய எம்பிராட்டியை, கண்களால் கண்டனென - அடியேன் கண்களாற் பார்த்தேன், அண்டர் நாயக - தெய்வநாயக, ஐயமும் பண்டு உள்ள துயரும் - சந்தேகத்தையும் முன்புகொண்டுள்ள துன்பத்தையும், இனித்துறத்தி என்று அனுமன் பன்னுவான் - இனிப்போக்குதியென்று அனுமான் சொல்லுவான். எ-று. (ருஅ)

ஐயமாவது பிராட்டி உயிரோடிருக்கின்றாளோ இலளோ வென்றுசங்கித்திருத்தல.

கூஎ. உன்குலமுன்னதாக்கியுயர்புகழ்க்கோருத்தியாய
தன்குலந்தன்னதாக்கித்தன்னையிந்நனிமைசெய்தான்
வன்குலங்கூற்றுக்கீந்தவ்வானவர்குலத்தைவாழ்வித்த
தென்குலமெனக்குத்தந்தாளெனவினிச்செய்யுந்தன்மையாய. (கூக)

இ-ள். என் கூலம் எனக்குத்தந்தாள் - மரபை வானைக்குக்கொடுத்தாள், கூலம் - குலம் என விகாரமாயிற்று. (சூக)

சூர்ப்பணகை பிராட்டிதந்தாளென்றது வாலி லெரியூட்டிய காலை "எரியே யவனைச்சுடல" என்ற பிராட்டி மொழியால் வாலழியாமைபற்றி.

ஐந்தாவது. சுந்தரகாண்டம்

முற்றிற்று.

---

காண்டம் ஐந்துக்கு ஆ திருவிருத்தம் - எ௨௩

---

ஸ்ரீராமதாசர்கள் திருவடிகளேசரணம்.



ஸ்ரீ

# சுந்தரகாண்டம்

## செய்யுளகராதி.


| செய்யுள். | பக்கம். |
|---|---|
| அகரும் | ௪0 |
| அக்காலே | ௮ |
| அஞ்சுவ | க௯ |
| அண்டமு | க௫ |
| அலங்கலி | க |
| அவித்து | உஉ |
| — | |
| ஆவியாக | உ௫ |
| — | |
| இந்திரனை | ௩௩ |
| இந்நாக | ௪ |
| இழையும் | க௬ |
| இளக்கா | உ௪ |
| இனைய | கஉ |
| இன்னோர் | உ௭ |
| — | |
| உங்குல | ௩௮ |
| உண்டாய | உ௮ |
| உன்குல | ௪உ |
| — | |
| எந்தைதின | ௩0 |
| எல்லி | க௮ |
| எழுந்தனர் | க௭ |
| — | |
| ஏந்தல் | உ௩ |
| ஏந்தினாள் | ௩௫ |
| ஏழுலகின | க௯ |
| — | |
| ஒடிஞா | ௩௫ |
| — | |
| கண்ட | ௪க |
| கதிரெழு | ௩௫ |
| கறுத்த | ௩௬ |
| — | |
| காதக்கடு | ௯ |
| காயத்தால் | க௭ |
| — | |
| குரக்கு | ௩௬ |
| குவித்த | ௩௭ |
| குழலும | கஉ |
| — | |
| கூன்குன | ௫ |
| — | |
| சாகாவர | ௪0 |
| — | |
| சிந்தார | க௯ |
| சிந்து | ௩க |
| — | |
| சூலம | உ௫ |
| — | |
| செவ்வான | ௬ |
| — | |
| சேயிதழ | உ௮ |
| — | |
| தடித்தா | உ0 |
| தடைபுகு | உஉ |
| தணிகினற | உ௯ |
| தநகிற | உ௬ |
| தலைகொளு | ௪0 |
| தனிக்கட | உ௩ |
| தனைநைக்கு | ௩௯ |
| — | |
| தாமரை | ௩க |
| — | |
| திங்கள் | ௩௭ |
| திருகுறுஞ் | க௫ |
| — | |
| துண்டத் | ௩௪ |
| — | |
| நந்த | ௩உ |
| — | |
| நாகா | கக |
| நாவி | ௩ |
| — | |
| நிறந்த | ௪ |
| நினைநூள் | ௯ |
| — | |
| நீணடான | ௮ |
| நீத்தா | ௩௪ |
| நீருமம | க௫ |
| நீனிற | உ௬ |
| — | |
| நூலோந்து | ௪ |
| — | |
| பஞ்சி | ௪உ |
| பணமணி | ௩உ |
| பரிதி | ௪0 |
| பல்லாயி | ௫ |
| பளிக்கு | உ௩ |
| — | |
| பாடலம | ௩0 |
| பாடுவார | க௬ |
| பாரை | ௩௮ |
| பாணிறுத | ௩௩ |
| — | |
| புறத்துற | ௩ |
| — | |
| பெரியநாள் | உக |
| — | |
| பேயமன | ௩௯ |
| பேழ்வாய் | ௮ |
| — | |
| பொனகொ | ௪0 |
| பொன்னின | க௭ |
| — | |
| போதா | உ௮ |
| போரியை | க௪ |
| — | |
| மணிகள் | க௩ |
| மணிகொ | உஉ |
| மரகதத் | க௪ |

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| மரமட | ௪௬ |
| — | |
| மாகாரின | ௧௧ |
| மாடிருநத | ௫௮ |
| — | |
| முன்பிற | ௬ |
| — | |
| மேக்கு | ௨௬ |
| — | |
| மைந்நாகம் | ௬௧ |
| — | |
| மொய்மணி | ௨௧ |
| — | |
| வருசங | ௨௰ |
| வணடலமபு | ௫௧ |
| வண்மைக் | ௫௭ |
| வநதெனை | ௨௯ |
| வள்ளிறுண | ௧௮ |
| வனறநத | ௨ |
| — | |
| வாழுமன | ௧௫ |
| வாளொத | ௭ |
| — | |
| விளித்துப | ௫ |
| — | |
| வெங்கார் | ௮ |
| வெருளும் | ௬௧ |


செய்யுளகராதி முற்றிற்று.

ஸ்ரீ

# உயுத்தகாண்டம் பிழைதிருத்தல்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௯ | ௭ | யெறற | பெறற |
| ௨௨ | ௨௧ | வேலைப .. | வேலை. |
| ௨௮ | ௨௭ | பொயகைப ... | பொயகை |
| ௫௭ | ௨௬ | நோககும ... | நோககும. |








நன்றாக குருவாழ்க குருவேதுணை.

ஸ்ரீ

ஸர்வம்விஷ்ணுமயம்ஜகத்.

ஸ்ரீமத்கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

# ஸ்ரீமத்கம்பராமாயண

## அருங்கவிவிளக்கம்.

## ஆறாவது யுத்தகாண்டம்.

### ௧ - வது. கடல்காண்படலம்.

### ஸ்ரீராகவபிரான் கடலைப்பார்த்ததைக் கூறுகின்றபடலம்.

தனியன்.

மகிழ்மாறனைவழுத்துவாயென்றனக்கு
நெகிழ்மாறனைநினைக்குநேயம் - முகிழ்மா
முலைக்கமலையேற்றமொழிகாவியத்தால
நிலைக்கமலையேகவருணி.

காப்பு.

௧. ஒன்றேயென்னின்ஒன்றேயாம்பலவென்றுரைக்கிற்பலவேயாம்
அன்றேயென்னினன்றேயாம்ஆமேயென்னினாமேயாம்
இன்றேயென்னினின்றேயாமுளதென்றுரைக்கினுளதேயாம்
நன்றேநம்பிகுடிவாழ்க்கைநமக்கிங்கென்னோபிழைப்பம்மா. (௧)

௨. பொங்கிப்பரந்தபெருஞ்சேனைபுறத்துமகத்தும்புடைசுற்றச்
சங்கிற்பொலிந்தகையாளைப்பிரிந்தபின்புதமக்கினமாங்
கொங்கிற்பொலிந்ததாமரையின்குழுவுந்துயில்வுற்றிதழ்குவிக்குந்
திங்கட்பொழுதுந்துயிலாதகண்ணன்கடலைக்கண்ணுற்றான். (௨)

இ-ள். மிகுந்து பரந்த பெரியசேனை வெளியிலும் (கணக்கால்) மனத்திலுஞ் சுற்ற, வளையல்களால் விளங்கிய கையுடைய பிராட்டியைப் பிரிந்தபின்பு கண்களான தமக்குறவாகிய, வாசத்தோடு விளங்கிய செந்தாமரை மலர்க்கூட்டமும நித்திரையடைந்து இதழ்களைக் குவிக்கின்ற, இராப்பொழுதிலுங் கண்வளராத ஸ்ரீராமபிரான் கடலைக்கண்டான் எ-று. (௩)

௩. சேயகாலம்பிரிந்துகலந்திரிநதான மீண்டுஞ்சேக்கையினபால
மாயனாவந்தானினிவளர்வானெனறுகருதிவருந்தெனறல
ஆயமலர்போனுரைததொகையுமுத்துஞ்சிந்திபபுடைசுருட்டிப
பாயலுதறிப்படுப்பதேயொத்ததிரையினபரப்பமமா. (௪)

இ-ள். மாயன், நெடுங்காலம்பிரிந்தகன்று யாண்டுந்திரிந்து படுக்கையின்பத்தால், மீண்டுமவந்தான இனி நம்மிடத்திற் கண்வளர்வானென்று கடல் நினைந்து வீசுகினற தெனறலால், பரிசுத்தமாகிய மலர்களை யொதத நுரைததொகையையும் முத்துக்களையுஞ் சிந்தி, பாயலை யுதறிச் சுருட்டி, விரிப்பதைததிரையின் தொகுதிகளொத்தன. எ-று. (௪)

௪. நென்னற்கண்டதிருமேனியின்றுபிறிதாயநிலைதளர்வான
றன்னைக்கணடிரங்காதுதனியேகதறுநதடங்கடலவாயப
பின்னற்றிரைமேறறவழுகினறபிள்ளைததெனறலகள்ளுயிர்க்கும்
புன்னைக்குறும்பூநறுஞ்சுண்ணமபூசாதொருகாறபோகாதே. (௫)

இ-ள். நேற்றுபபார்த்த திருமேனி இன்று வேறாகி நிலையினின்று தளர்வானாகிய, ஸ்ரீராமபிரானைப பார்த்தும அவனிடம் வந்து நின்னருமைத திருததேவியை நீங்கினையோ வென்று அழாது தனியே கதறுகினற பெரிய கடலினிடத்துண்டாகிய, பின்னு தலை யுடைய அலைகளின்மேல் தவழுகின்ற இளந்தென்றல் தேனைச்சொரிகின்ற, புன்னையினது சிறிய மலர்களின் நறுவியதாதுகளை யொருகாற் பூசாது போகாதோ. எ-று, (௫)

பிராட்டி கடலிற்றோன்றினவளாகலின் அதை ஸ்ரீராகவனார்க்கு மாமி யெனவும் தென்றலை மைத்துனனெனவுங் கொண்டு கம்பர் கூறியதாயுள்ள விசேஷார்த்தமுமுண்டு.

௯. இந்தவன்னறந்தறபேதையிருந்தாணீங்காவிடர்கொடியேன்
றந்தபாவைதவபபாவைதனிமைதக்கவோவெனததளாந்து
சிந்துகின்றநறுந்தாளக்கண்ணீாததும்பித்திரைததெழுந்து
வந்துவள்ளனமலாததாளினவீழ்வதேயக்குமறிகடலே. (௯)

இ-ள். அலைமறிகின்ற கடல், பிறையையொத்த நெற்றியை யுடைய சீதாபிராட்டி நீங்காத துனபததி லிருககினறாள், கொடி யேனாகிய யான்பெற்ற அப்பெணணாகிய தவபபெண் தனிமையி லிருப்பது தகுதியோவென்று மனநதளாநது, சிந்துகினற நல் லமுததுக்களாகிய கண்ணீா ததுமபித திரைததெழுநது, வந்து ஸ்ரீராமபிரானது மலாபோனற திருவடிகளில விழுவதை யொக் கும். எ-று. (௯)

௰. பள்ளியரவிறபேருலகமபசுஙகல்லாகபபணிகாறறை
துளளுநறுமெனபுனறெளிபபததுநீாசகுழவிமுறைசுறறி
வெளளிவணணநுரைககலவைவெதுமபுமணணறிருமேனிக்
கள்ளியபபததிரைககரததாலரைபபதேயககுமணியாழி. (௰)

இ-ள். இரத்தினஙகளையுடைய கடல், ஆதிசேடன்மே லிரு க்கினற பெரியபூமி அமமியாக, பனிககறறை துள்ளுகின்ற நறு விய மெல்லிய நீரைத தெளிக்க, புனலாகிய குழவியால முறை சுற்றி, வெளளி நிறமுடைய நுரையாகிய கலவைச் சாந்தை, வெதும்புகினற ஸ்ரீராமபிரானது திருமேனியிலளளிப் பூசததி ரையாகிய கரததாலரைப்பதை யொககும. எ-று (௰)

## உ-வது. மந்திரப்படலம்.

:o.

### அனுமான் இலங்கையைக்கொளுத்திவந்தபின்பு இராவண னதனை முன்போலச்செய்து மந்திரியரோ டாலோசித்ததைக்கூறுகின்றபடலம்.

௧. பூவருமயனொடும்புகுநதபொனனகர்
மூவகையுலகினுமழகுமுற்றுற
வேவெனவியறறினனகணததினென்பராத
றேவருமருளகொளத்தெய்வததச்சனே. (௧)

இ-ள். பூவருமஅயனொடும் புகுந்து - திருமாலுந்தித்தாமரையிற்றோன்றிய பிரமனோடும் இராவணன இலங்கைவந்து, பொன்னகர் - அழகிய அவ்விலங்காபுரியை, மூவகைஉலகினும அழகுமுற்றுற - மூன்றுலகினு மிலலையென்று அழகதிகரிக்கும்படி, ஏவு என-(இராவணன பிரமனைப்பார்த்து) ஏவுதியென்று சொல்ல, தெய்வதச்சன தேவரும மருள்கொளள - மயன் தேவர்களும அதிசயிக்கும்படி, கணத்தின இயற்றினன் என்பர் - கணப்பொழுதிற் செய்தனனென்று சொலலுவர் அறிந்தோர். எ-று. (க)

அ. பொனனினுமணியினுமமைநதபொறபுடை
நன்னகர்நோக்கினனாகநோக்கினன
முன்னையினழகுடைததெனறுமொயகழன
மனனனுமுவநதுதனமுனிவுமாறினன. (உ)

இ-ள். நாகம் நோக்கினன் - தெய்வலோகத்தைப்பார்த்து, பொனனினும் மணியினும் அமைந்த பொற்பு உடை - பொனனாலு மிரத்தினங்களாலுஞ்செய்த வழகுடைய, நல்நகர் நோக்கினன் - நல்ல இலங்கையைபபார்தது, மொய்கழல் மன்னனும் - மொய்த்த வீரகண்டாமணி யணிந்த இராவணனும, முன்னையின் அழகு உடைத்து என்று - (இலங்கை) முன்னினு மழகுடையதென்று, உவந்து தன் முனிவு ஆறினன - மனமுவந்து தனது கோவ மாறினன். எ-று. கோவமும எனனும உமமையை முன்னையினுமெனறு மாறுக. (உ)

நாகநோக்கினன் நன்னகர் நோக்கினன் எனவே தேவருலகும் இலங்காபுரியும் முன்பு ஒத்த அழகுடையவாயின. முன்னையி னழகுடைத்தெனவே அததேவருலகினும் இலங்கை யிப்போது சிறந்ததாயிற்று.

கூ. இச்சிரததவனுரைததிறுக்குமெல்லையில்
வச்சிரதெயிறறவன வலலைகூறினன்
அச்சிரத்தைக்கொருபொருளன்றாயினும்
பச்சிரததம்பொழிபருதிக்கண்ணினன. (உஅ)

இ-ள். இச்சிரத்தவன்-இத்தலைமையானமகோதரன்,(உஅ)

இந்திரசித்துஇராவணனுக்குச்சொல்லியது.

௬௦. குரங்குபடமேதினிகுறைததலைபடப்போ
ரரங்குபடமானிடரலநதலைபடப்பே
ரிரங்குபடர்சீதைபடவின்றிருவாினரூர்
சிரங்குவடெனக்கொணர்தல்காணுதிசினத்தோய். (௬௧)

இ-ள். சினத்தோய் - கோபமுடையாய், குரங்குபட - குரங்குகள் சாக, மேதினி குறைத்தலைபட - புவியில் கவந்தங்கள் கிடக்க, போர் அரங்குபட - போர்க்களம் யாண்டு முண்டாக, மானிடர் அலந்தலைபட - மானிடரெல்லாருந் துன்பப்பட, சீதை இரங்குபேர் படர்பட - சீதை வருந்துகின்ற மிகுந்த துன்பத்திலழுந்த, இருவர் நின்றார் சிரம குவடு என - இராமலக்குமணரென்று இருவராய் நின்றவரது தலைகளை மலையைப் போல, இன்று கொணர்தல காணுதி - இன்றே யான் கொணர்தலைப் பார்த்தி. எ-று (௬௧)

விபீடணுழ்வானஇராவணனுக்குச்சொல்லியது.

கக. மிடல்படைதசொருவனுயமரர்கோனவிடையதாயவெரிநின்மேலாய்
உடல்பதைததவுணராயினரெலாமடியவாளுருவினுனும
அடல்படைத்தவனியைபபெருவளநதருகவெனறருளினனும்
கடல்படைததவனெடுங்கங்கைதநதவனவழிக்கடவுணமன்னன். ()

இ-ள். வாள் உருவினுன்-வாளையுருவிய காகுத்தன், வளம் தருக என்று அருளினுன் - வளத்தைத தருகவென்றருளிய பிருதுசக்ரவர்த்தி, கடலபடைத்தவன் - சகரன், நெடும் கங்கை தந்தவன் - பகீரதன், வழிக்கடவுள் மனனன் - என்னு மிவர் குலத்திற் றேனறிய தெய்வத் தன்மையுடைய தயரதசக்ரவர்த்தி. உம்மை இரண்டுமசாரியை. (அரு)

இதுவுமது.

கஉ. பேருமோவொருவராலவர்களாலல்லதிஃபெரியவேனும்
நாருமூரியுமருநம்முடைச்சிலைகள்போனவியலாமோ
தாருவோவேனுவோதானுவாயுலகினைத்தழுவிநிறகும்
மேருவோமால்வரைக்குலமதோவல்லவோவில்லுமனனே. (அகூ)

இ-ள். வில்லும் - அவரதுவிற்களும், அவர்களால் அல்லது ஒருவரால் பேருமோ - இராமலக்குமணரென்னு மவ்விருவர்களாலல்லாமல் வேறொருவரா லிடம்விட்டெழுமோ, நம்

முடைச்சிலைகள்போல் நாரும் மூரியும் அரு-நம்முடையதனுக்களைப்போல அச்சாபங்கள் நாணையும் வலியையுமரு, இஃபெரியவேனும் - நம்முடைய விற்கள் பெரியவாயினும், நலியலாமோ - அவற்றை யழிக்கலாமோ, தாருவோ - மரமும், வேணுவோ - மூங்கிலும், தாணுவாய் உலகினைத் தழுவிநிற்கும் மேருவோ-தூணாகிப் புவியினைததழுவி நிற்கின்ற மேருகிரியும், மால்வரைக் குலமதோ – பெரியமலைக்குலமும், அல்லவோ - அவரது விற்களல்லவோ. எ-று. (அகூ)

இதனானே அவரது விற்கள் அவற்றின் வலியைப் படைத்தனவென்பது.

இதுவுமது.

கந. புகனமதிதநுணர்கிலாமையினமகெளிமைசாலபொறுமைகூர
நகனமதிககிலமறுபபொலியவாளொளியிழநதுதயநணணும்
பகன்மதிக்குவமையாமவிபுதராமிரவுகாலபருவநாளி
ணகனமதிககுவமையாயினதபோதனருளாாவதனமம்மா. (கூந)

இ-ள். புகல் மதித்து உணர்கிலாமையின் - யாம் சரணமடையுமிடத்தை யெண்ணி யுணராமையால், எளிமைசால் பொறுமை நமக்குகூர - எளிமையமைந்த பொறுத்தல்நமக்கதிகமுண்டாகவும, நகல்மதிக்கிலம்-சிரித்தலை யெண்ணிலம்,மறுப்பொலியவாள் ஒளி இழந்து - மாசுவிளங்க வொளியை யிழந்து, பகல் - பகறபொழுதில, உதயம் நண்ணும் - உதயமாகின்ற,மதிக்கு உவமையாம் - சந்திரனுக் கொப்பாகிய, விபுதர் - தேவர்கள், தபோதனர் - தவத்தோர்கள், ஆம - ஆகிய, உள்ளார்வதனம் - உள்ளவரது முகங்கள், பருவநாளில் - பௌர்ணமியில், இரவுகால் - இரவுகாலைற, அகல்மதிக்கு உவமை ஆயின - அகன்ற சந்திரனுக் கொப்பாயின. எ-று. (கூந)

இராவணனவிபீடணூழ்வானுக்குசசொலலியது.

கச. சொல்லுமாறறங்கடெரிநதிலைபன்முறைதோற்றும்
வெல்லுமாற்றலுமொருமுறைபொறுததனனவிண்ணைக்
கல்லுமாற்றலெனகிளையையுமெனனையுஙகளத்திற்
கொல்லுமாற்றலருளரெனகோடலுங்கொண்டாய். (கoச)

இ-ள். சொல்லும் மாற்றங்கள் தெரிந்திலை- சொல்லுகின்ற வார்த்தைகளை யறிந்திலை, ஒருமுறை தோற்றும் - ஒருமுறை

தோல்வியடைந்தும், வெல்லும் ஆற்றலும் பல்முறை பெற்றுத் தனன் - வெல்லும் வலியையும் பலமுறைகொண்டேன். (௧0௪)

இதுவுமது.

௧௫. பித்தனாகியவீசனுமாலுமெனபெயாகேட்
டெய்த்தசிந்தையரேகுழியேகுழியெலலாங
கைத்தவேறறினுங்கடவியபுளளினுமுதுகிற
றைத்தவாளிகளின்றுளாகுனறினவீழதடிததின. (௧௧௬)

இ-ள். பித்தன் ஆகிய ஈசனும் மாலும் என்பெயர் கேட்டு-உன்மத்தமுடையவனாகிய சிவனுந் திருமாலு மெனது பெயரைக்கேட்டு, எயத்த சிந்தையர் ஏகுழி ஏகுழி எலலாம் - தளர்ந்த மனமுடையராகி யோடு மிடங்களிலெலலாம், கைத்தவேற்றினும் கடவிய புள்ளினும் முதுகில் - வெறுத்த இடபததினுஞ் செலுத்திய புள்ளரசினும் முதுகில், தைததவாளிகள் - தைத்த அம்புகள், குன்றின்வீழ் தடித்தின-மலைமேல் விழுந்த இடியைப்போல, இன்று உள - இன்றுமுள்ளன. (௧௧௬)

பெயர்கேட்டலாவது - இராவணன் வருகின்றானென்று சொல்லக்கேட்டல். கைததலாவது - ஏகுழி யேகுழி யெல்லாம் அவனடித்தலால் இவரைச சுமந்தன்றோ இவ்வுதைபட வேண்டியதாயிற்றென்று வெறுத்தல்.

---

## ௩-வது. இரணியன்வதைப்படலம்.

---

விபீடணனுழவானஇராவணனுக்குச்சொல்லியது.

௧௬. பாழிவன்றடநதிசைசுமநதோங்கியபணைக்கைப
பூழிவன்கரியிரண்டிருகைகொடுபொருதது
மாழுஙகாணுதற்கரியவாயகனறபேராழி
யேழுந்தனனிருதாளளவெனககடநதேறும. (௩)

இ-ள். பெரியவலிய விசாலமுள்ள திசைகளைச் சுமந்தோங்கிய பருத்தகரத்தையுடைய, புழுதிபடிந்த வலிபொருந்திய இரண்டு யானைகளைத் தன திரண்டுகரங்களைக்கொண்டு முட்டவிடுவான், ஆழம்பார்த்தனுக்கரியவாயாழ்ந்த பெரியகடல்களேழை

யும், தன திருகாலனவென்று சொல்லும்படிக் கடந்தேறுவான். எ - று. (ந)

இதுவுமது.

கள. மண்டலநதருகதிரவன்வநதுபோய்மறையு
மெணடலநதொடறகரி னதடவரையிரண்டும்
கணடலம்பசும்பொனனிற நதவறகிளங்காளை
குணடலங்கண மறறென்னிப்பெருவிறல்கூறின். (கக)

இ-ள். இனிப்பெருவிறல் கூறின் - இனி அவனது மிகுந்த வலியைச் சொல்லின், மணடலம் தருகதிரவன் வந்து போய் மறையும்-வட்டமாகிய சூரியனுதயமாகிச் சென்று மறைகின்ற, எண் தலம் தொடற்கு அரியனதடவரை இரண்டும் - மனந் தொடர்தலுக் கரியனவாகிய பெரியமலைகளிரண்டும், கண்தலம் பசும் பொன் நிறத்தவற்கு இளம் காளை-இரணியாக்கனுக்கிளைய அவ்விரணியனுக்கு, குண்டலங்கள்-குண்டலங்களாயின், மற்று என் - வேறுயாது. (கக)

இதுவுமது.

கஉ. மருக்கொடாமரைநான்முகன்முதலியவாஞேர்
குருக்களோடுகெறறுவதவனபெருங்கொற்றம்
சுருக்கநான்மறைதொனறுதொட்டுரைதொறுநதோன்று
திருக்குநதெய்வமுமிரணியவேநமவெனனும். (கஉ)

இ-ள். நான்மறை சுருக்கம் - நான்குவேதங்களின் சுருக்கமாகிய பிரணவத்தில், தொன்றுதொட்டு உரைதொறும் தோன்றுது இருக்கும் தெய்வமும் - பழமையாக வார்த்தைகள்தோறுந் தோன்றுமலிருக்குந் தெயவமும், (கஉ)

பிரகலாதாழ்வானுக்குச்சுக்கிராசாரிசொல்லியது.

கங. முநதைவானவாயாவர்க்குமுதல்வறகுமுதலோ
னுநதைமறறவனதிருபபெயருரைசெயறகுரிய
வந்தணுளனேனெனனினுமறிதியோவையா
விநதவிபபெயருரைததெனைககெடுததிடலென்றுன. (உங)

இ-ள். முந்தைவானவர் யாவர்க்கும்முதல்வற்கும் - உலகுக்கு முற்பட்ட தேவர்களெல்லார்க்கும் முதற்கடவுளுக்கும், உந்தைமுதலோன் - உனது தந்தை முதலோன், அவன் திருப்

பெயர் உரைசெயற்கு உரிய - அவனது திருநாமத்தை யோது தற்குரிய, அந்தணாளனேன் என்னினும் ஐயா அறிதியோ - அந் தணாளனாகிய என்னைக் காட்டிலும் ஐயா அறிதியோ, இந்த இப் பெயர் உரைத்து என்னைக்கெடுத்திடல் என்றான் - இந்த இப் பெயரைச் சொல்லி யென்னைக் கெடுக்காதியென்றுசொன்னான். எ - று. (௨௯)

அவன் திருப்பெயராவது இரணியவே நம என்றல.

இப்பெயராவது ௨௩ - வது. பாட்டில் ஓநமோநாராயணாய என்றல் - தான் அந்தத்தை யணுவுவோனென்பான் அந்தணாள னென்றான். அந்தமாவது வேதாந்தம்.

பிரகலாதாழ்வானசுக்கிராசாரிகருச்சொல்லியது.

௩0. எனககுநானமுகததொருவற்கும்யாரினுமுயர்நத
தனககும்வேறுளசராசரமனைததிற்குநதலைவன்
மனககுவாநதனனவந்தனயாவையுமறையோ
யுனக்குமின்னதினல்லதொன்றிலலெனவுரைததான். (௩௩)

இ-ள். யாரினும் உயர்ந்த தனக்கும் - எல்லாரினு முயர்ந்த இரணியனாகிய தனக்கும்,

இரணியன்பிரகலாதாழவானுக்குச்சொல்லியது.

௩௧. தேவர்செய்கையனங்஭னமுரைசெயததீயோன்
றுவில்வேதியன்றக்கதேயுரையெனத்தக்கோ
னுவதாருகவனறெனிலறிருவமனறே
யேவதவ்வுரையியம்புதியியம்புதியெனறான். (௪௧)

இ-ள். தீயோன் - இரணியன், தாஇல்வேதியன் - குற்றமி ல்லாத சுக்கிராசாரி, தக்கதே உரை எனத்தக்கோன்-ஓதத்தகுந் ததையே யோதென்று சொல்லத்தகுந்தவன்,

பிரகலாதாழவான்இரணியனுக்குச்சொல்லியது.

௩௨. முக்கட்டேவனுநான்முகததொருவனுமுதலா
மக்கட்காறுமிம்மநதிரமறநதவாமறநதார்
புக்குக்காட்டுவதரிதிதுபொருவுறக்காண்பா
ரொக்கநோக்கினரல்லவரதனிலையுணரார். (௪௪)

இ-ள். இம்மந்திரம் மறந்தவர் மறந்தார் - இம்மந்திரத்தை மறந்தவர் தம்மை மறந்தாராவர், புக்குக்காட்டுவது அரிது-

சொல்லிக்காட்டுவ தரிதாகலின், இது பொதுவுறக் காண்பார்- இதனை நடுவுநிலைமை பொருந்த வுணர்வாரோடு, ஒக்க நோக்கினர் அல்லவர் அதன நிலைஉணரார் – கூட ஆராய்ந்தவரையல்லாதவர் அம்மந்திரத்தினிலையை யுணரார். (௪௪)

இரணியனபிரகலாதாழவானுக்குச்சொலலியது.

௨௩. முனைவர்வானவர்முதலினாமூன்றுலகதது
மெனையருள்ளவர்யாவருமெனனிருகழலே
நினைவதேததுவதெனபெயாநினககிதுநேர
வனையரஞ்சுவாமைந்தநீயாரிடையறிநதாய. (௪௫)

இ-ள். மைந்த - குமரா, முனைவா வானவர்முதலினர்மூன்று உலகத்தும் எனையர் உள்ளவர்யாவரும் – முனிவர் தேவர்முதலினரும மூன்றுலோகத்திலு மெவ்வகைப்பட்டவரா யுள்ளவரெல்லாரும், என் இருகழலே நினைவது - எனதிரண்டு பாதங்களையே தியானிப்பதும், என்பெயா ஏத்துவது-எனது பெயரையே துதிப்பதுமா யிருகக, நினக்கு இது நேர அனையர் அஞ்சுவர் - உனக்கு இதைச்சொல்ல அமமுனைவர் முதலியோரஞ்சுவர், நீ ஆரிடை அறிந்தாய் - நீயாரிடததிற் கற்றாய். எ-று. ()

பிரகலாதாழ்வானசொல்லியது.

௨௪. கருமமுங்கருமததின்பயனுங்கண்ணிய
தருமுதறறலைவனுநதானுநதானவ
னருமையும்பெருமையுமறிவரேலவ
ரிருமையெனறுரைசெயுநகடனின்றேறுவார். (௪௬)

இ-ள். கருமமும் கருமத்தின் பயனும் - வேள்விமுதலிய கருமங்களும் அக்கருமங்களின் பயனும், கண்ணிய தருமுதல் தலைவனும் - நினைத்தவற்றைக் கொடுககின்ற ஆதிபகவனும், தானும் - பெறுகின்ற சீவனும், தான் - தானே யாவன், (௪௬)

இதுவுமது.

௨௫. * புகுதியினுட்பயனபயாநததனனதின்
மிகுதியினமிகுதிகளைவையுமேலவாம
வுகுதியினவசததலுவரவுபோக்கது
புகுதியிலலாதவர்புலததிறமுருகுமோ. (௪௭

இதுவுமது.

௨௬. * எழுத்தியலுளதனெண்ணிலாவகை
முழுத்தனிநான்முகன்முதலமறறுயிர
வழுத்தரும்பொருட்டதோரொளியினவைகுமால
விழுத்தனிபபல்லிதழ்விரையிலாமுகிழ். (௭௦)

இதுவுமது.

௨௭. சிநதையிறசெயகையிற்சொல்லிறசோநதுளன
இநதியநதொறுமுளனுறறதெணணினுன
முநதையோரெழுததெனவநதுமமமுறைச
சந்தியும்பதமுமாயததழைததனமையான. (௭௨)

இ-ள். முந்தை ஓர் எழுத்து என வந்து - பழமையான வொப்பற்ற அககரமெனவந்து, மும்முறைச் சநதியும பதமும் ஆய் தழைத்த தன்மையான் - மூனறுகிரமஙகளையுடைய சந்தியும் பதமுமாகித் தழைத்த தன்மையையுடையான. (௭௨)

முந்தையோரெழுத்தாவது பணவம். அதனுள் மூன்றெழுத்துள்ளனவென்றும் அவற்றுக்குப் பததுப்பிரகாரமாய்ப் பொருளுள்ளதென்றும் * "மூன்றெழுத்ததனை மூன்றெழுத்ததனால் மூன்றெழுத்தாக்கி" என்ற பாசுரம் அபபொருளைக் கொண்டதென்றுங் கூறுப.

௨௮. வெண்கோடிறறனமெயயிலாசெய்யுங்
கணகோடறபொறியிற்கடிதேகி
யெண்கோடறகரிதெனனவெகுணடான
றிணகோடைககதிரிநறெறுகணணன். (௯௮)

இ-ள். வெண்கோடு இற்றன - வெள்ளிய கொம்புகளொடிந்தன, மெய்யிலர் செய்யும் கண் - மெய்யிலர் துன்பஞ் செய்யுமிடத்து, திண்கோடைக் கதிரில் தெறுகண்ணன் - முதிர்ந்த கோடைக்காலத்துச் சூரியனைப்போல அழிக்கின்ற கண்களையுடைய இரணியன், கோடல் பொறியில் கடிது ஏகி-பார்த்தலைச் செய்கின்ற இந்திரியமாகிய கண்போல விரைவிலேகி, எண்

* மூனறெழுததனைமூன்றெழுததனுலமூனறெழுததாககிமூனறெழுத்தை
ஏன்றுகொண்டிருபபாக்கிரக்கநன்குடையவெமபுருடோததமனிருக்கை
மூன்றடிநிமிர்த்துமூனறினிற்றேன்றிமூன்றினிமூன்றுருவானை
கான்றடம்பொழில்சூழ்கங்கையின்கரைமேற்கண்டமெனனுமகடிநகரே.

கோடற்கு அரிது என்ன வெகுண்டான் - இவனது வலியை வாங்குதலுக்கு அரிதென்னவென்று கோவித்தான். எ-று. ()

உகூ. அத்தனமையறிநதவருநதிறலோ
னுய்ததுய்ம்மினெனமுன்னெனவுய்ததனராற்
பித்துணடதுபோவுறுமாபெறுதங்
கைத்துஙகடுநஞ்சினெனக்கனலா. (ககசு)

இ-ள். அத்தன்மை அறிந்த அரும்திறலோன் - அத்தன்மையைத் தெரிந்த அரிய வலியுடைய இரணியன், என்முன்- எனக்கு முன், உய்த்து உய்மின் என உய்த்தனர் - (பிரகலாதனை) கொண்டு வாருமென்று சொல்லக்கொண்டுவந்தனர், பித்து உண்டு அதுபோர்உறும் ஆபெறுதும்-(அப்பிரகலாதனை)பித்துத் தொடுத்ததுண்டு அப்பித்து நீங்கும் விதத்தைச் செய்வோம், என - என்று கருதி, கைத்தும் கடும் நஞ்சின் கனலா - கைக்கின்ற கடியவிடம்போலக் கோவித்து. எ-று. (ககசு)

ரூ0. இட்டார்கடுவல்விடமெண்ணுடையான
ரொட்டானுகரததொ[illegible]னசயிற
கட்டார்கடுமததிகைகளகொடியான
விட்டானவன்மேலவாவீசினரால். (ககரு)

இ-ள். கடுவன் விடம் இட்டார் - கடிய வலிய விடத்தைக் கலத்திலிட்டார், எண்ணுடையான் - தியானமுடையான், நுகரத்தொட்டான் - உண்ண அவ்விடத்தை யெடுத்தான், கொடியான் - இரணியன், தொகைவன் கசையில்-கூட்டமாகிய வலிய முறுக்கிய கம்பிகளைப்போன்ற, கட்டு ஆர் கடுமத்திகைகள் விட்டான் - கட்டமைந்த கடிய குதிரைச் சம்மட்டிகளை யெடுத்தெறிந்தான், அவர் அவன்மேல் வீசினர் - அவர் அப்பிரகலாதன்மேல் வீசினர். எ-று. (ககரு)

ரூக. குயிற்றியவண்டங்குஞ்சையிட்டிலாமுட்டைமுட்டப
பயிற்றியபருவமொத்தகாலத்துளமுதுபல்கும்
எயிற்றுவன்பகுவாயுள்புக்கிருக்குனவிருக்கையெய்தி
வயிற்றின்வருதன்னுளின்னுள்வாழுமன்னுயிர்கண்மனனே. (கரூ௫)

இ-ள். குயிற்றிய அண்டம் குஞ்சை இட்டிலா முட்டை முட்ட - தான்படைத்த அண்டமாகிய குஞ்சைப் பொறிக்காத

ழூட்டையுள் மோத, பயிற்றிய பருவம் ஒத்த காலத்துள்-(குஞ்சைப்பொறிக்க) அனைத்தகால மொத்தகாலத்தில், வயிற்றின் வந்து - உதரத்தினின்றுவந்து, அந்நாள்-இரணியனைக்கொன்ற அக்காலத்திலும், இந்நாள் - இக்காலத்திலும், வாழும் மன்னுயிர்கள் - வாழுகின்ற நிலைபெற்ற வுயிர்களை, அழுது பல்கும் வன்எயிற்று பகுவாய் உள்புக்கு - அமுதூறுகின்ற வலிய பற்களையுடைய பெரியவாயுட புகுந்து, இருகைகை எய்தி இருக்குன-தாமிருககுமிடத்தையடைந்து இருந்தன. எ-று. (கஙரு)

கூஉ. வகிர்ப்படுத்துரககுமபறறிவாய்களைபபிளககும்வனரேறுல்
துகிற்படுத்துரிககுஞ்செநதீககணகளைநசோணடுஞ்சுறறிய
பகிர்பபடக்குடரைககொய்யுமபசையறபபிசையும்பல்கா
லுகிரபபுரைபுகசோர்தம்மையுகிாகளாலுறககுமூனறி. (சகூஅ)

இ-ள். உகிர்ப்புரைபுக்கோர் தம்மை உகிர்களால் ஊன்றி உறக்கும் - நகஙகளினுடபுகுந்த அசுரர்களை நகங்களாலூன்றிப் பிதுக்கும், (கஙஅ)

பிரமனதுதி

கூகூ. தனனைப்படைத்ததுவுநதானேயெனுந்தன்மை
பினனைப்படைத்ததுவேகாட்டும்பெருமபெருமை
யுன்னைப்படைததாய்நீயெனருலுயிர்படைபபா
னெனனைபபடைததாயெனுமிதுவுமேதாமோ. (கருஎ)

இ-ள். தன்னைப் படைத்ததுவும் தானே எனும் தன்மை பின்னைப் படைத்ததுவேகாட்டும் – தன்னை யுண்டாக்கியதுந்தானே யென்னுந் தன்மையை (எல்லாரையும் படைத்தயென்னை) பின்புண்டாக்கியதுவே சொல்லும், பெரும பெருமை - பெரிய பெருமையுடைய, (கருஎ)

இதுவுமது.

கூச. பேரையொருபொருட்கேபல்வகையாறபோதநெண்ணுந
தாரைநிலையதனியைபிறரிலலை
யாரைப்படைககின்றதியாரையளிககினற
தியாரைததுடைககினறதையாவறியேமால. (கருக)

இ-ள். பேரை - எல்லாப் பேர்களையுமுடையை, ஒருபொருட்கே பல்வகையால் பேர்த்து எண்ணும் - (நீயாகிய) ஒருபொருளையே பலவகையால் வேறுபடுத்தெண்ணுகின்ற, தாரை நிலை

யை - ஒழுங்குடைய நிலைமையுடையை, தனியை - தனிமை யுடையை, பிறர் இல்லை - இவ்வாறு நீயன்றிப்பிறரில்லை, (கடுசு)

## ச - வது. விபீடணனடைக்கலப்படலம்.

## விபீடணுழ்வான் சரணுகதஞ்செய்ததைச் சொல்லும்படலம்.

இராவணன்விபீடணுழ்வானுக்குச்சொல்லியது.

கடுரு. இரணியனெனபவனெம்மனேரினு
முரணியனவனைமுருககிமுறறினை
அரணியனெனறவறகனபுபூணடனை
மரணமென்றெருபொருண்மாறறும்வணமையோ. (உ)

இ-ள். இரணியன் என்பவன் எம்மனேரினும் முரணியன்-இரணியனென்று சொல்லப்படுபவன் எம்போலியரினும் வலியுடையவன், அவன் தன்னை முருக்கி முற்றினன்- அவனைக்கோவித்து முடித்ததிருமால், அரணியன் என்று-காப்பவனுவானென்று, மரணமென்று ஒருபொருள் மாற்றும் வண்மையோ-சாவென்று சொல்லப்படுகின்றவொரு பொருளைப் போக்கும் வண்மையாலோ, அவற்கு அனபு பூண்டனை - அத்திருமாலுக் கன்பு செய்தனை. (உ)

கடுசு. மினனகுமணிவிரறறெயவீழ்சணீா
துன்னருமபெருஞசுழியழிபபசசோர்விறோ
டினனகைநுளைசசியரிழைககுமாழிசால
புனனையம்பொதும்பருமபுககுநோககினை. (உஅ)

இ-ள். மின் நகுமணி விரல்தேய - ஒளிவிளங்குகின்ற இரத்தினம் பதித்தவிரல தேயும்படி சுழித்த, துன அரும்பெரும் சுழி - கூட வரிதாகிய பெரிய சுழியை, வீழ்கண்ணீர் அழிப்பச் சோர்விறோடு -விழுகின்ற கண்ணீர் அழிக்கச் சோர்வோடு இன் நகை நுளைச்சியர் இழைக்கும் ஆழிசால் - இனிய பற்களையுடைய நெய்தனிலப்பெண்கள் (மீண்டும்) செய்கின்ற வட்டங்

களமைந்த, புன்னை அம்பொதுமபரும்புக்குநோக்கினான் - புன்னைமரங்கள் நிறைந்த அழகிய சோலையையும் புகுந்து பார்த்தான். எ-று. (உ௮)

சுழிக்குஞ் சுழிகளையெல்லாங் கண்ணீரழிபபதால சோர்வினேடிழைக்கு மென்றார். சுழியின்னதென்று பாலகாண்டத்திற் கூறினும்.

௩௭. கூதிர்நுணகுறும்பனிநதிவலைசகோவைகால
மோதிவெணடிரைவாருடவெணடாமரைமேற
பாதியஞ்சிறையிடைபபெடையைப்பாடலைநத
தோதிமநதுயிலவகணடியாபபுவீஙகினுன. (உகூ)

இ-ள்' வெண்திரைமோதிவர - கடலினது வெள்ளியஅலைகள் மோதி வீச, கூதிர் நுண்குறும்பனித்திவலைக்கோவைகால்-காற்றால் நுண்ணிய சிறிய குளிர்சசியுடைய திவலை வரிசைகளைத்துளிக்கின்ற, மூடவெண்தாமரைமேல-கோணலுடைய வெண்டாமரை மரததின்மேலிருநது, (உகூ)

௩௮. மறறொருபொருளுளதெனனின்மாறிலாக்
கொறறவசரணெனககூயதோருரை
உறறதுசெவிததலதனதயனொலலென
நறறுணைவரைமுகநயநதுநோககுறு. (௩ரு)

இ-ள். மற்று ஒருபொருள் உளது என்னில் - நின்னையன்றியொருபரமபொருளுள்ளதென்று சொல்லின்,மாறிலாக் கொற்றவ-அதினின்றும் வேறுபடாத இறைவ,சரண்எனக கூயதுஓர் உரை - சரணமென்று நினைககூவியதாகிய வொருவார்த்தை, செவித்தலத்து உற்றது - செவியிற் பட்டதென்று சொல்ல, ஐயன் ஒலலென நல்துணைவரை முகம் நயந்து நோக்குறு-ஸ்ரீராகவபிரான் விரைவாய் நல்லதுணைவராகிய சுககிரீவன்முதலியோரது முகஙகளை விரும்பிப்பார்த்து, (௩ரு)

மயிநதனஸ்ரீராகவபிரானுக்குசசொலலியது

௩௯. முரணபுகுதீவினைமுடிததமுனனவன
கரணபுகுசூழலேசூழககாணபதோ
ராண்பிறிதிலலெனவருளினவேலையைச
சரணபுகுநதனனெனமுன்னஞசாறறினுன. (ருக)

இ-ள். மூரண்புகு தீவினை முடித்த முன்னவன் - வலியுடைய தீவினைகளைச் செய்த தமையன், காண்புகு சூழலே சூழ்மனஞ் சென்ற வழியிலே செல்ல, காண்பது ஓர் அரண் பிறிது இல் என-தான்பெறுவதாகிய வோர்காப்புவேறில்லையென்று, ()

௬௦. * அடுத்தநாட்டரசியல்புடையவாணையாற
படுத்தவர்பட்டவாபகைஞரோடொரு
மடக்கொடியயந்தவாமைந்தராயினு
முடற்கொளத்தகையாநமமுறைழவநதொன்றினல். (௮௧)

அனுமான்சொலலியது.

௬௧. பகைபபுலத்தோர்துணையல்ல ரென்றிவரைபபற்றேமேலறிஞர்பார்க்கி
னகைப்புலத்ததாமனறேநறுயமுளதாயபறறுனமிகக
தகைப்புலத்ததந்தையாகடமபியர்கடமையரிவாதாமேயனரே
மிகைப்புலத்துவிளைகினறதொரு பொருளைக்காதலிககின்விளிஞராவார்

இ-ள். பகைப்புலத்தோர் துணை அல்லர் என்று இவரைப்பற்றேமேல்-பகையிடத்தோர் நமக்குத் துணையாகாரென்றிவரைக்கொள்ளேமாயின், அறிஞர் பார்க்கின் நகைப்புலத்தது ஆம்-அறிவுடையோர் கேட்பின் அது சிரிப்பிடத்ததாகும், மிகைப் புலத்து விளைகின்றது ஒருபொருளைக் காதலிக்கின்-மிகுதியான அறிவினிடத்திலுண்டாகிய ஒருபொருளை விரும்பின், நல்தாயம் உளதாய பற்றுல் மிக்க-நல்லவுறவுளதாகிய அன்பால் மிகுந்த, தகைப்புலத்த தந்தையர்கள் தம்பியர்கள் தமையர் இவர்தாமே விளிஞர் ஆவார் - மேன்மைபொருந்திய அறிவுடைய தந்தையர்களுந் தம்பியர்களுந் தமையர்களுமாகிய விவர்தாமே 'கோவமுடையோராவார், (௬௦௩)

ஸ்ரீராமபிரான்சொல்லியது.

௬௨. பிறநதநாடொடஙகியாருநதுலைபுக்கபெரியோன்பெற்றி
மறநதநாளுணடோவெனவனைச்சரணெனவாழ்கினறுனைத்
துறநதநாட்கின்றுவநதுதனனினுனசூட்சியாலே
இறநதநாளனறேவெனறுமிருநதநாளாவதெனறுன. (௬௦௪)

இ - ள். துலைபுக்க பெரியோன்பெற்றி - ஒருபுறவின் பொருட்டாகத் துலையிலேறிய சிவிசக்ரவர்த்தியின் குணத்தை, யாரும் பிறந்தநாள் தொடங்கி - எல்லாருந் தாம் பிறந்தநாள் மு

தல், மறந்தநாள் உண்டோ - மறந்தநாளுமுண்டோ, என்னைச் சரண் என வாழ்கின்றானை - எனக்கபயங்கூறி வாழ்கின்ற வீடணனை, துறந்தநாட்கு - நானபயஞ்செய்யாமல் நீக்கியநாளுக்கு, இன்றுவந்து துன்னினான் சூழ்ச்சியாலே-இன்றுவந்து சேர்ந்த அவ்வீடணன் செய்யுந் தந்திரத்தாலே, இறந்தநாள் அன்றோ என்றும் இருந்தநாள் ஆவது என்றான - மரித்தநாளன்றோ என்று மிருந்த நாளாவதென்று சொலலினான. எ-று. (கoகூ)

எதிர்மறை உமமை வருவிக்கபபடடது.

இதுவுமது.

சங. மன்னுயிரெல்லாந்தானே வருவித்துவளர்க்குமாயன
தன்னனவுலகமெல்லாந்தருமமுமெலவயுந்தானே
யெனினுமடைந்தார்தமமையேமுறவினிதிறேமையிப்
பினனும்வீடளிக்குமெனறாலென்னினிபபிறிதுபேசில. (ககக)

இ-ள். நிலைபெற்ற வுயிர்களெல்லாவற்றையுந்தானேபடைத்துக் காக்கின்ற திருமால், தன்னுடைமையனவாகிய எல்லாவுலகங்களுந் தருமமுதலிய யாவுந்தானே யாயினும், அடியார்களை உவக்க இனிது காததுப்பினபு நிரதிசயவின்பவீட்டையும் அருளுவா னென்றால் பேசில் (அபயஞ்செய்ய வேண்டியதேயன்றி)வேறினியாதுளது. (ககக)

சச. மாற்கடஞ்சூழ்ந்தவைபபினஙகதன்மருஙகுகாப்ப
நாற்கடலுடுததபாரினாயகனபுதலவனைமப
பாறகடல்சுறறவிறகைவடவரைபாஙகுநிறகக
காரக்கடலகமலம்பூததெனபபொலிவானைககணடான. (கஙக)

இ - ள் அங்கதன் மருங்கு காப்ப - அங்கதனொருமருங்கு நின்றுகாக்க, வில்கை வடவரை பாங்குநிற்க - விலலைக கையிலுடைய மேருகிரியை யொத்த இளையபெருமாள ஒருபககநிற்க, நாமப்பால் கடல்சுற்ற – அழகிய பாற்கடல சூழ, கார்க்கடல் கமலம் பூத்தது எனப்பொலிவான் - கருமையுடைய கடல்தாமரைமலர்களை மலர்ந்ததைப்போல விளங்குகினற, நாலகடல் உடுத்த பாரின் நாயகன் புதல்வன் - அசைதலையுடைய கடலாடை யுடுத்திய புவிக்கு நாயகனாகிய சக்ரவர்த்தித் திருக்குமரனை, மற்கடம் சூழ்ந்தவைப்பில் - குரங்குகள் சூழ்ந்த நிலத்தில், கண்டான் - விபீடணாழ்வான் பாரத்தான். எ-று. (கஙக)

மற்கடம - மாற்கடமென விகாரப்பட்டது.

சரு. அள்ளிமீதுலகைவீசுமரிக்குலச்சேனைநாப்பண்
டெள்ளுதண்டிரையிற்ருகிப்பிறிதொருநிறனுஞ்சாரா
வெள்ளியகடலின்மேனுள்விண்ணவர்தொழுதுவேண்டப்
பள்ளிதீர்ந்திருந்தானென்னப்பொலிதரும்பண்பினானை. (கருஉ)

இ - ள். தெள்ளுதண்டிரையிற்று ஆகிப்பிறிதுஒருநிறனும் சாரா—தெள்ளிய குளிர்ச்சியுடைய அலைகளையுடையதாகிவேறொருநிறனுஞ் சாராத, வெள்ளியகடலின் மேல்நாள் விண்ணவர் தொழுது வேண்ட - திருப்பாற்கடலில் முனனாளில் தேவர்கள் தொழுது பிரார்த்திக்க, பள்ளிதீர்ந்து இருந்தான என்ன-யோகநித்திரை நீங்கி வீற்றிருந்தவனைபபோல, உலகை அள்ளி மீது வீசும் அரிகுலச்சேனை நாப்பண் - உலகைப் பிடுங்கி மேலெறிகின்ற வலியுடைய குரங்குச் சேனையினடுவில்,பொலிதரும்பண்பினானை - பொலிகின்ற அழகுடையானை. எ-று. (கருஉ)

சசு. கோணுதறகமைந்தகோலப்புருவம்போற்றிரையுங்கூடப்
பூணுதறகினியமுத்தினபொலிமணல்பரந்தவைபபிற
காணுதற்கினியநீளவெணமையிறகருமைகாட்டி
வாணுதறசீதைகணணினமணியெனவயஙகுவானை. (கருரு)

இ-ள். கோணுதலுக் கமைந்த அழகுடைய புருவங்களைப் போல அலைகளுஞ்சேர, அணிதலுக கினியமுத்துக்களைப்போலப் பொலிகின்ற மணல் பரந்த விடததில், பார்த்தலுக்கினிய நீண்ட வெண்மையிற் கருமையைத் தோற்றி, ஒளிபொருந்திய நெற்றியையுடையசிதாப்பிராட்டியினது கண்ணினது மணியைப்போல விளங்குவானை. எ-று. (கருரு)

கோள்நுதற்கு அமைந்த - பெருமைபொருந்திய நெற்றிக் கமைந்த எனவுமாம்.

சஎ. படர்மழைசுமநதகாலைப்பகர்வருமமரர்கோமா
னடர்சிலைதுறநததென்னவாரநதிமார்பினானைக்
கடல்கடைமத்திறபாம்புகழுறறியதெனனக்காசின்
சுடரொளிவலயநீததசுநதரததோளினானை. (கருசு)

இ - ள். (மேகங்கள்)படர்ந்த புனலைக்கொண்ட காலை துதித்தலுக்கரிய இந்திரனது, வலியுடையவில்லை நீக்கியதென்று சொல்லும்படி இரத்தினமாலை நீங்கியமார்புடையானை, கடலைக்

கடைந்த மந்தரகிரியாகிய மத்திற் சுற்றியகயிறாகிய வாசுகியைக் கழற்றியதென்று சொல்லுமபடிக்குற்றமிலலாத, மிகுந்தஒளியையுடைய தோள்வலயங்களை நீதத வழகிய தோளுடையானை. எ - று. (கஙச)

சஅ. மினமினியொளியினமாயுமபிறவியைவேரின்வாங்கச
செம்மணிமகுடநீககிததிருவடிபுனைநதசெலவன
றம்முனாகமலததணணறுதையாாசரணநதாழ
வெமமுனறெனககுசசெயதவுதவியெனறேமபலுற்றான. (கஙஎ)

இ - ள். மின்மினிப் பூச்சியினதொளியைப்போலக் கணப்பொழுதில் மாய்கின்ற பிறவியை வேரொடுமபறிக்க, செவந்த இரத்தினங்கள் பதித்த கிரீடத்தைநீககிப் பாதுகங்களைத் தரித்த செல்வனாகிய பரதாழ்வானுககு, மூத்தோராகிய தாமரைமலரில் வதிகின்ற பிரமனுககுத் தந்தையாரது திருவடிகளை வணங்க, எனது தமையனாராகிய இராவணனுறெனக்குச் செய்தவுதவியென்று விபீடணாழ்வான் மகிழ்வுற்றான். எ-று. (கஙஎ)

---

## ரு-வது. இலங்கைகேள்விப்படலம்.

:0:

## இலங்கையின்சிறப்பை விபீடணாழ்வான்சொல்ல ஸ்ரீராகவபிரான்கேட்டதைக்கூறுகின்றபடலம்.



விபீடணாழ்வானசொலலியது.

சக. விண்ணிடைவிழித்தனர்கிறகும்வெய்யவ
ரெணணிருகோடியினிரட்டியெனபரான
மணணிடைவானவாவருவரெனறவா
கணணிலாகரையிலாகரநதுபோயினா. (உரு)

இ-ள். கரையிலர்-அளவில்லாதவர், மண்ணிடை வானவர் வருவர்என்று - புவியில் தேவர் வருவரென்று, அவர் கண்ணிலர் கரந்துபோயினர் - அத்தேவர் கண்ணுக்குத் தோன்றாராகியொளிந்து போயிருககின்றனர், (உரு)

இதுவுமது.

௫0. தேவருநதக்கமுனிவருநதிசைமுகனமுதலா
மூவருமபக்கநோகக்யேமொழிதரமுனிவான
ஏழுவரும்பக்கமெனை ணிருகோடியினறலைவன
மாபெரும்பக்கனெனறுளனகுனறினுமவலியான். (௩௯)

இ-ள். தேவர்களும் தககமுனிவர்களும பிரமன் முதலிய, மூவர்களும் (அசசததால்) பக்கம பாரததுப் பேசும்படி கோவிப்பான், கெடுதலில்லாத சேனை பதினெழுகோடிக்குத் தலைவன், மாபெரும்பக்க னென்றொருவ னுள்ளானவன் மலையி னும் வலியுடையான். எ-று. (௩௯)

இதுவுமது.

௫௧. உச்சிரதமெரிகதிரெனவுருதெரிமுகதத
னச்சிரப்படைநாலிருகோடிககுநாதன்
முசசிரத்தயிறறலைவறகுமவெலறகருமொயம்பன்
வசசிரதமெயிறறவனுளனகூறறுவனமாறறன். (௪0)

இ-ள். உச்சிரதத்து எரிகதிர் என உருத்து எரிமுகத்தன் - உச்சிப்பொழுதில ரதத்தினின் றெரிகின்ற சூரியனைப்போலக் கோவித்தெரிகின்ற முகத்தையுடையான், அச்சிரப்படை - அத் தலைமையான படை, (௪0)

---

## ௬-வது. வருணனைவழிவேண்டுபடலம்.

———:o:———

இதுவுமது.

௫௨. கரநதுநினறநினறனமையயதுசெலககருதும
பாரநததுனதிருககுலமுதறறலைவராறபரிவாய
வரநதரும்மிநதமாககடல்படைசெலவழிவே
றிரநதுவேண்டுதியெறிதிரைபபரவையையென்றன. (௨)

இ-ள். கரந்து நின்ற நின்தன்மையை செல்லக் கருதும் - ஒளிந்து நின்ற உனது தன்மையைக கடக்கக் கருதுகின்ற, அது - அக் கடல், உன் திருககுலமுதல் தலைவரால் பாரந்தது - உனது திருக் குலத்திற்கு முதலாகிய தலைவர்களால் தோண்டப்பட்ட தாக லின்; இந்த மாக்கடல் பரிவாய் வரம் தரும் - இந்தப்பெரியகடல்

## ௨௬-வது. மருந்துப்படலம்.

:o:

## அனுமான் சஞ்சீவியைக் கொணர்ந்ததைக் கூறுகின்றபடலம்.



*சாம்புவான் அனுமானுக்குச்சொல்லியது.*

௨௪௧. *மாண்டாரை யுயிர்க்கு மருந்தொன்று மெய்வேறு வகிர்களாக்க, கீண்
டாலும் பொருந்துவிப்ப தொருமருந்து படைக்கலங்கள் கிளர்ப்ப தொ
ன்று, மீண்டேயுந் தம்முருவே யருளுவதோர் மெய்ம்மருந்து முள நீவிர்,
வாண்டேகிக் கொணர்தி யென வுடையாள் தந்தொடு முறைதந்தா னறிவி
ன மிக்கான்.* (௨௭)

இ-ள். படைக்கலங்கள் கிளர்ப்பது ஒன்றும் - மெய்யிற்ப திந்த ஆயுதங்களை வெளிப்படுத்துவதொரு மருந்தும், மீண்டேயும் - முற்று மழிந்தபின்பு திரும்பவும், தம் உருவே அருளுவது ஓர் மெய்மருந்தும் உள - தமது தேகத்தையே கொடுப்பதாகிய ஒப்பற்ற மெய்மருந்துமுள்ளன, (௨௭)

௨௪௨. *தொடுத்ததார் மாலைவானோர் முனிவரே முதலாந் தொல்லோ
ரடுத்தநாண் மறைகளோதி யாய்ந்தநா ளவுணர்வேந்தன்
கொடுத்தநா ளளந்துகொண்ட குறளனார் குறியபாத
மெடுத்தநா ளொத்ததண்ண லெழுந்தநா ளுலகுக்கெல்லாம்.* (௩௦)

இ-ள். அண்ணல் எழுந்தநாள் - அனுமான் மருந்துகொணர எழுந்தநாள், உலகுக்கெல்லாம - உலகிலுள்ளோர்களுக்கெல்லாம், தொடுத்தநாள் மாலைவானோர் - நாரால்தொடுத்த அன்றலர்ந்த பூமாலையணிந்த தேவர்களும், முனிவர்முதல் ஆம் தொல்லோர் - முனிவர்முதலாகிய பழமையோரும், அடுத்தநாள் - திருமாலிடஞ்சேர்ந்த நாளையும், மறைகள் ஓதி ஆய்ந்தநாள் - வேதங்களையோதித் துதித்தநாளையும், அவுணர்வேந்தன் கொடுத்தநாள் - அவுணர்க்கரசனாகிய பலிச்சக்கிரவர்த்தி தானங்கொடுத்தநாளையும், அளந்துகொண்ட குறளனார் குறிய பாதம் எடுத்தநாள் ஒத்தது - திருவடியாலளந்துகொண்ட குறளனார் அளப்பதற்குச் சிறியபாதத்தை யெடுத்தநாளையுமொத்தது. எ-று (௩௦)

அடுத்தநாள் முதலாகிய அந்நாட்களும் அண்ணலெழுந்த அந்நாளும் உலகுக்கினபஞ்செய்த நாளாகலின் ஒத்ததென்றார்.

ஸ்ரீராகவபிரானது திருக்கண்களைக்குறித்தது சொல்லியது.

உ௧௯. வணடனமடந்தையாமனத்தை வேரொடுங்
கணடனகொளவருங்கருணைததாமெனக
கொணடனகொடுபபனவரங்களகோளிலாப
புணடரீகத்துணை தருமம்பூததன. (௯௫)

இ-ள். வண்டு அன மடந்தையர் மனத்தை வேரொடும் கண்டன - வண்டைப்போல மாதர்களது தாமரையாகிய மனத்தை வேரோடு மறிந்தனவும், கொள அரும் கருணை ததாம் எனக் கொண்டன — பெறுவதற்கரிய அருளே தாமென்று கொண்டன வும், வரஙகள் கொடுப்பன-அடியார்கள் வேண்டிய வரங்களைக் கொடுப்பனவுமாகிய, கோள் இலலாப் புண்டரீகத்துணை தருமம் பூத்தன - குற்றமில்லாத தாமரையாகிய இரண்டு கண்களுந் தருமம்போல மலர்ந்தன. எ - று (௯௫)

சாம்புவான ஸ்ரீராமபிரானுக்குச்சொல்லியது.

உ௧௪ யானலாலெநதையாயுலகையீனறுளான
ருனலாறசிவனலாநேமிதாஙகிய
கோனலாலியாவருமுணருஙகோளிலா
வேனிலானமேனியாயமருநதைமெயயுற. (௮௬)

இ-ள். வேனிலான் மேனியாய் - மதனனையொத்தத் திரு மேனியுடையாய, மருந்து மெயயுற - மருந்துகள் மெய்யாக, யான் அல்லால் - யானல்லாமலும, எந்தையாய் உலகை ஈன்று உள்ளான் அல்லால் - எனது தநதையாய உலகைப் படைத் துள்ள பிரமனல்லாமலும், சிவன் அல்லால-சிவனல்லாமலும், நேமிதாங்கிய கோன் அல்லால் - சக்கிரத்தைக்கொண்ட இறை வனல்லாமலும், யாவரும் உணரும்கோள் இல்லா - எல்லாரு மறியுங் கொள்கையில்லாதனவாம். எ-று, (௮௬)

---

## உச-வது. களியாட்டுப்படலம்.

—:o:—

# பகைவென் றுருவப்பாற் கட்குடித்தாட்டங் காணுதல் வழக்காகலாற்பிரமாஸ்திரத்தாலிறந்தகவிகள் மருந்தாற் பிழைத்தமையுணராத இராவணன் நறவுபருகிமகளிராட்டங்கண்டதைக் கூறுகின்றபடலம்.

உகரு. நற்பெருங்கலவிச்செலவநவையறுநெறியைநண்ணி
முறபயனுணாநததூயோரமொழியொடும்பழகிமுறறிப
பிறபயனுணாதறேறமுப்பேதைபோலவஞ்சன்செயத
கறபனையெனனவோடிக்கலாநதநுகள்ளின்வேகம். (சு)

இ-ள். நலலபெருமையுடைய கல்வியாகியசெல்வத்தினது குற்றமற்ற நெறியையடைந்து, முற்பயனுணர்ந்த தூயோரது சொல்லோடும் பழகியறிவால் முதிர்ந்து, பின்பதன் பயனையறிதல் செய்யாதபேதையை யொத்த வஞ்சனுகிய இராவணன்செய்த, கற்பனையைப்போலக் கள்ளின் மயககம்விரைந்து கூடிற்று.

உகசு. கூநதலம்பாரக்கறறைகொநதளககோலககொணட
லேநதகலல்குறறேரையிகநதுபோயிறங்கயாணாப
பூநதுகிலோடும்பூசன்மேகலைசிலமபபூண்ட
மாநதளிரெயதநொயதினமயங்கினர்மழலைச்சொலலார். (அ)

இ-ள். அம்கூந்தல் பாரக்கற்றை - அழகிய கூந்தற் பாரக்கற்றையாகிய, கொந்தளக்கோலக்கொண்டல் - குழற்சி பொருந்திய அழகுடைய மேகம், ஏந்து அகல அல்குல்தேரை இகந்து போய் இறங்க - ஏந்திய அல்குலாகிய தேரைக் கடந்துபோய்த் தாழ்ந்து, யாணாப்பூந்துகிலோடும் - புதுமை பொருந்திய அழகுடைய ஆடையோடும், பூசல் மேகலை - ஒலியுடைய மேகலையோடும், சிலம்புபூண்ட மாந்தளிர் எய்த - நூபுரமணிந்தபாதத்தைச்சார, மழலைச்சொல்லார் நொய்தில் மயங்கினர் - மழலைச் சொல்லுடைய மாதர்கள் விரைவில் மயஙகினர். எ-று. (அ)

உ௭. கோததமேகலையினேடுநதுகின்மணிக்குறங்கைககூடக்
காதரன கூநதற்கற்றையுற்றவததன்மைகண்டு
வேததலைகீழுளோருங்கீழ்மையேவிளைததார்மேலோர்
சீாததவாசெய்யத்தகககருமமேசெய்தாரெனன, (கூ)

இ-ள். வேத்தவை கீழ் உள்ளோர் கீழ்மையே விளைத்தார்- ஏனமுள்ளோ ரிராசசபையி லீனத்தையே செய்தார், மேலோர் சீர்த்தவர் செய்யத்தக்க கருமமே செய்தார் என்ன - மேலோ ராகிய சிறந்தவர் தாஞ்செய்யத்தகுந்த மேலானகருமத்தையே செய்தாரென்று சொல்லும்படி, சோத்தமேகலையிறுேடும் துகில் மணிக்குறங்கைக்கூட - கோத்த மேகலாபரணத்தோடு முடித்திய ஆடையழகுடைய துடையைச்சார, உற்ற அத்தன்மை கண்டு - சார்ந்த அத்தன்மையைப்பார்த்து, கூந்தல கற்றை காத்தன-கூந்தற்கற்றைகள்பூானத்தலத்தைக் காத்தன. எ-று.( )

உகஅ. * பாணியிற்றளிகசாலமாகதிரைபடாதுபட்ட
நாணினமுறையிறசெலலாதொருவழிநடையிறசெல்லு
மாணியினழிநதபாடனறவெனவனங்கவேடன
தூணியினடைத்தவம்பிறகொடுநதொழிலுறந்தகண்ணா. (ச0)

உகூ. வங்கியமவகுததகானமாறுகொண்மழலைமாருச
சங்கையிலபெருமபாணுறறநிறததுறைநிரமபிததளளச
சிங்கலினமிர்திறுேடுமளியளிதேறலெனன
வெங்குரலெடுததபாடலவிளிததனாமயககம்வீஙக. (சக)

இ-ள். வங்கியம் வகுத்தகானம மாறுகொள் மழலைமாரு - பொளளாங் குழல வகுதத கானததை மாறுகொண்டமழலைச் சொல்லோடு வேறுபடாத, சஙகையில பெரும்பாண் உற்ற நிறத்துறை நிரம்பிததளள - குற்றமில்லாத பெருமைகொண்ட பண்பொருநதிய வண்ணத்துறைகள் நிரமபித்தள்ள, சிஙகல் இல் அமிர்திறுேடும அளி அளி தேறல் எனன - குறைதலில்லாத அமுதையும் வண்டுகள கொடுககினற தேனையும்போல வினிமையாய, மயக்கம்வீஙக வெம்குரல் எடுத்த பாடல் விளித்தனர் - மயககமுண்டாக விரும்பததக்க குரலாலெடுத்த பாடலைப பாடினர் எ - று (கக)

உஉ0. * ஏனையபிறவுங்கணடார்ககிநதிரசாலமெனனத
தானவையுருவிறறுேனறுமபாவனைததகைமைசான்றோர்
மானமாறோககிறுைரமைநதரைக்காட்டிவாயா
லானைமைவிளம்பித்தேவரயபிநயத்தியறறியுறறுர். (கஉ)

உஉக, உயிர்ப்புறத்துறறதன்மையுணர்ததிறுருளளததுள்ள
தயிர்பபினிலறிந்திரனறேயுதுகளியாட்டமாகச்
செயிர்ப்பறுசிநதைதசெய்வததிருமறைமுனிவர்க்கேயு
மயிர்ப்புறந்தோறும்வநதுபொடித்ததுகாமவாரி. (சங)

இ-ள். அயிர்ப்பு இல் - ஐயமில்லாமல், உள்ளத்து உள்ள - மனத்திலுள்ளதாகிய, காமவாரி-காமவெள்ளம், உயிர்ப்புறத்து உற்றதன்மை - தங்களுயிரினிடத்துப் பொருந்திய தன்மையை, அறிதிர் என்று - உணர்திரென்று, அது களி யாட்டம் ஆக - அதனைக் களியாட்டங் காரணமாக, உணர்த்தினர் - அபிநயத்தால் தெரிவித்தார், செயிர்ப்பு அறு சிந்தைத் தெய்வத்திருமறை முனிவர்க்கேயும் - கோவமற்ற மனத்தையுடைய தெய்வத்தன்மைபொருந்திய வைதிக முனிவர்களுக்கும், மயிர்ப்புறந்தோறும் வந்து பொடித்தது - (அக்காமவாரி) மயிரிடங்கடோறும் வந்து பொடித்தது. எ - று. (௧௪)

---

## உ௫ - வது - மாயாசீதைப்படலம்.



### பிராட்டியைப்போல மாயையாலுண்டாக்கிக் கொன்றதைக் கூறுகின்றபடலம்.

—:0:—

௨௨௨. இலங்கையினின்றுமேருபிற்படவிமைப்பிறபாய்ந்து
வலங்கிளாமருநதினறமலையொடுங்கொணரவல்லா
னலங்கலநதடநதோளண்ணலனுமனேயாகவேணடுங்
கலங்கலிலுலகுக்கெலலாங்காரணங்கணடவாற்றால. (௩)

இ-ள். கலங்கல் இல் உலகுக்கு எல்லாம் காரணம்கண்ட ஆற்றால் - கலங்குதலில்லாத வுலகங்களுக்கெல்லாம் ஸ்ரீராமபிரானருள்செய்தவிதத்தால், (௩)

ஆகவேண்டுமென்று முடிக்க.

௨௨௩. மானிடனல்லன்றெலலைவானவனல்லன்மறறு
மேனிவர்முனிவனல்லனவீடணன்மெய்யிறசொன்ன
வேனவனெண்ணிறதீர்ந்தாரெண்ணுறுமொருவனென்றே
தேனகுதெரியனமனனுசேகறத்தெரிநததனறே. (௧௨)

இ-ள். எண்ணில் தீர்ந்தார் எண்ணுறும் ஒருவன் என்றே - மனத்தாற் பற்றற்றவர் தியானிக்குமொருவனென்றே, (௧௨)

---

## உசு - வது - நிகும்பலைப்படலம்.

:o:

## நிகும்பலையென்னுமிடத்தில் இந்திரசித்து யாகஞ்செய்ததைக் கூறுகின்றபடலம்.



உஉசு. மினனுமபடைவீசலின்வெம்பகைமேற்
பன்னுங்கவிசேனைபடிந்துளதாற்
றுனனுநதுறைநீர்நிறைவாவிதொறும்
அன்னங்கள்படிந்தனவாமெனலாய் (உஉ)

இ-ள். துறைதுன்னும் நீர்நிறைவாவிதொறும் - துறைகள் நெருங்கிய புனல்நிறைந்த குளங்கள்தோறும், அன்னங்கள்படிந்தன எனலாய் - அன்னப்புட்கள் படிந்தனவென்று சொல்லும்படியாய், மின்னும்படைவீசலின் வெம்பகைமேல் - மின்னுகின்ற ஆயுதங்களை யெறிதலினால்வெவ்விய இராக்கதர்மேல், பன்னும்கவிசேனை படிந்துளது - சொல்லுகின்ற குரங்குசேனை படிந்துள்ளது. எ - று. (உஉ)

உஉரு. பல்லாரபடைநினறதுபலலணியாற்
பலலாரபடைநின்றதுபல்பிறைவெண்
பல்லாரபடைநின்றதுபலவிடமும்
பல்லாரபடைநினறதுபல்படையே. (உஎ)

இ-ள். பல்படை - கருக்குடைய ஆயுதங்களைக்கொண்ட, பல்லார் - பலவீரர்களேறிய, படைநின்றது - தேர்பபடை நின்றது, பல் அணியால் - பல அணிகளோடு, பல் ஆர் படை நின்றது - கல்லணை பொருந்திய குதிரைப்படைநின்றது, பல்பிறை வெண்பல்லார்-பலபிறைகள் போன்ற வெள்ளிய பற்களையுடையராகிய, படைநின்றது - காலாட்கள் படைநின்றது, பல் இடமும்-பலவிடங்களிலும், பல் ஆர்படை நின்றது-கல்லணை பொருந்திய யானைப்படை நின்றது. எ-று. (உஎ)

உஉசு. சிலையின்கணையூடுதிறநதனதிண்
கொலைவெங்களிமால்கரிசெம்புனல்கொண்
டுலைவின்றுகிடந்தனவொத்துளவால்
மலையுஞ்சுனையும்வயிறும்முடலும். (கூக)

இ-ள். சிலையின்கணை ஊடு திறந்தன - வில்லினின்றுபோய் வாளிகள் ஊடுபிளக்க, திண்வெம் களிமால்கரி வலியவெவ்விய செருக்குடையபெருமைபொருந்திய யானைகள், கொலை - கொலை செய்யப்பட்டு, செம்புனல்கொண்டு உலைவுஇன்றுகிடந்தன - இரத்தத்தைக்கொண்டு அழிவின்றிக்கிடகக, உடலும் வயிறும் - அவ்யானைகளின் உடலும் வயிறும், மலையும் சுனையும் ஒத்துள - மலையையுஞ் சுனையையுமொத்துள்ளன. எ-று. (ருக)

உஉஎ. விற்றொ நதியவெ ங கணையெணகினைப்
பறறொதியபோறபடியபபலவு
முறறசசுடாமினமினிமொய்தது ளவன
புறறொததமுடி ததலைபூழியன. (ருஉ)

இ-ள். எண்கின இனப பல் தொததியபோல் - கரடிகளின் கூட்டமாகிய பற்கள் தொத்தியபோல், வில்தொத்திய வெம்கணை - வில்லில் தொத்திய வெவ்வியசரங்கள், பலவும்படிய - பலவுந்தைக்க, பூழியன முடித்தலை - புழுதியுடையனவாகிய மகுடமணிந்ததலைகள், முற்றச்சுடர்மின்மினிமொயத்தது உள்ளவன் புற்று ஒத்த - முதிர்ந்த ஒளியுடைய மின்மினிப்பூச்சிகள் மொய்த்துள்ளவலிய புற்றுககளையொத்தன. எ-று. (ருஉ)

உஉஅ. படுமாரிநெடுங்கணைபாய்தலினுல
விடுமாறுதிரபபுனலவீழ்வனவாற
றடுமாறுநெடுங்கொடிதாழ்கடலவாய்
நெடுமாமுகிலவீழ்வநிகர்த்தனவால. (ருரு)

இ-ள். பெய்கின்ற மழைபோல நீண்டவாளிகள் தைத்தலினால், அலைவீசுகின்ற நதிபோன்ற இரத்தப்புனலில் விழுவனவாகிய, தடுமாறுகின்ற நெடிய கொடிகள் ஆழ்ந்த கடலினிடத்தில், படிவனவாகிய நெடியமேகங்களையொத்தன. எ-று. (ருரு)

உஉகூ. மினனாரகணைதாளறவீசவிழுந
தனனுருதிரத்துளழுநதுவதா
லொனனார்முழுவெண்குடையொத்தனவாற
செந்நாகம்விழுங்கியதிங்களினை. (ருச)

இ-ள். ஒன்னார் முழுவெண்குடை - பகைவராகிய அரக்கரது முழுவெண்குடைகள், மின் ஆர் கணை வீச - ஒளிபொருந்

தியவாளிகள்தைக்க, தாள்அறவிழுந்து-தாளற்று விழுந்து, அன்ஞர் உதிரத்துள் அழுந்துவதால் - அவ்வரக்கரது இரத்தநதிலழுந்துவதால், செங்நாகம் விழுங்கிய திங்களினை ஒத்தன - சிவந்த பாமபு விழுங்கிய சந்திரனையொத்தன. எ-று. (௩௯)

உ௩0. மாவாளிகண்மாமழைபோலவரலால
மாவாளிகள்போாதெறுமாமறவோா
மாவாளிகளவனறலையினறலைவாழ
மாவாளிகளோடுமரிநதனரால. (௩௧)

இ-ள். மாவாளிகள் மாமழை போல்வரலால் - பெருமைபொருந்திய அம்புகள்பெருமழைபோலப்பாய்தலால், மா ஆளிகள்போர் தெறும்மாமறவோர-பெரியயாளிகளைப் போரிற் கொல்லுகின்ற சிறந்தவீரர்களாகிய, மாஆளிகள் - குதிரைவீரர்கள், வன்தலையின் தலைவாழ் - வலிய தலையினிடத்தி லணிந்திருந்த (பூமாலையில்) மொய்க்கின்ற, மா ஆளிகளோடு மரிந்தனர் - சிறந்த வண்டுகளோ டிறந்தனர். எ-று. (௩௧)
அளி ஆளி என விகாரமாயிற்று.

உ௩௧. அங்கஙசமிகத்துணிபட்டதனு
லங்கங்குமிகுததவமர்த்துறைவா
யஙகங்கழிசெமபுனலபமபலமைத
தங்கங்கணிரம்பியலம்பியதால். (௪0)

இ-ள். அங்குஅங்கு மிகுத்த அமர்த்துறைவாய் - அவ்வவ்விடங்களிலதிகப்பட்ட போர்த்துறைகளில், அங்கு அஙகம் மிகத்துணி பட்டதனுல - அங்கு சரீரங்கள் அதிகந்துணிக்கப்பட்டதனுல், அங்கம் கழி செம்புனல் பம்பல் அமைத்து - தேகத்தினின்றுசிந்திய இரத்தம் பரவுதலைச் செய்து, அங்கங் கண் நிரம்பி அலம்பியது-அவ்வவ்விடங்களில் நிரம்பித் ததும்பியது. எ - று. (௪0)

உ௩உ. அங்கடஙகழிந்தபோருவிக்குன்றினின
றங்கடங்கழிநதவாளிழநதவாடவ
ரங்கடங்கலும்படர்குருதியாழியி
னங்கடங்கினுர்துடர்பகழியஞ்சினுா. (௪௧)

இ-ள். அம்-புனலைப்போல, கடம் கழிந்தபேர்அருவிக்குன்றினின்று-கதுப்பினின்று சிந்தியமிகுந்த மதவருவியுடைய் யானை

யினின்று, துடர்பகழி அஞ்சினர் - தம்மைத்துடர்கின்ற வாளி க்கஞ்சி, அம்கடம் கழிந்து அவ்வாள்இழந்த ஆடவர் - மேகம போன்ற வுடலை யிழந்தவ் வாளாயுதத்தை யிழந்தவீரர், அங்கு அடங்கலும பட்ர் குருதி ஆழி அங்குஅடங்கினர் - அப்போர்க் களமுழுதும் பரவுகின்ற குருதிக்கடலாகிய அவ்விடத்துமுழு கினர். எ - று. (௪௬)

## ௨௭-வது. இந்திரசித்துவதைப்படலம்.

௨௯௯. உய்வினையொருவன்றூண்டானுலத்தலிற்றவததைநண்ணி
ஐயவினைநலியநைவானறிவிறகுமுவமையாகி
மெய்வினையமைந்தகாமம்விற்கின்றவிரகிறறோலாப்
பொய்வினைமகளிர்கறபும்போன்றதபொலம்பொற்றிண்டேர். ()

இ-ள். அப்பொலம் பொன் றிண்டேர் - அழகிய பொன்னு லாகிய வலியவத்தேர், ஒருவன் உய்வினை தூண்டான் உலத்த லில் - ஒருவனுய்யுங் கருமத்தைச் செய்யானுகிக் கெடுதலால், தவத்தை நண்ணி ஐவினை நலியநைவான் அறிவிற்கும் உவமை ஆகி - தவத்தையடைந்து ஐம்பொறிகளின் செயல்கள் தன்னை வருத்த வருந்துவானதுணர்வுக்குமுவமையாகி, மெய்வினை அமைந்த காமம் விற்கின்றவிரகில் தோலா - சரீரச் செயலா லமைந்த காமத்தை விலைக்குவிற்கின்ற உபாயத்திற் றேல்வி யடையாத, பொய் – பொய்யையும், வினை - வஞ்சகத்தையுமு டைய, மகளிர்கற்பும் போன்றது-பொருட்பெண்டிரது கற்பையு மொத்தது. எ - று. (௨௮)

௨௯௪. வீரரென்பார்கட்கெல்லாமுன்னிற்கும்வீரர்வீரன
பேரரென்பார்களாகும்பெற்றியிறபெற்றிற்றேமே
சூரரெனறுரைக்கறபாலார்துஞ்சும்போதுணாவிற்சோரார்
தீரரென்றமரர்பேசிச்சிந்தினூர்தெயவப்பொற்பூ. (௯0)

இ-ள். வீரரென்று சொல்லப்படுவார்களுக் கெல்லாம் முன் னிற்கின்ற வீரருள் வீரனுகிய இந்திரசித்தினது, பேருடையா ரென்று சொல்லப்படுவார்களாகின்ற தன்மைபோல (பிறர்க்கு) அத்தன்மையுடை மையாமோ ஆகாது, (௯0)

தந்திரனொருவனைச் சிறப்பித்துக் கூறுங்கால் இந்திரசித்தென்று கூறும் வழக்குண்மையால் அப்பெயர் பிறர்க்காகாதென்பது கருத்து.

உ௱௫. அந்தரமதனினின்றவானவருக்கன்வீழாச்
சந்திரன்வீழாமேருமால்வரைதகாந்துவீழா
விந்திரசித்தினபொறடுதோளிறந்திடைவிழுந்ததென்று
மெந்திரமனையவாட்கையினிச்சிலருவந்ததென்றார். (சுசு)

இ-ள். ஆகாயத்தினின்ற தேவர்கள் சூரியன் விழாமலும், சந்திரன் விழாமலும், மேருகிரியுடைந்துவிழாமலும, இந்திரசித்தினது பொலிவுடைய தோளிடையிற்று விழுந்ததென்றால், திரிகையை யொத்த வாழ்வுஇனிச்சிலரால் விரும்பப் பட்டதென்று சொல்லினர். (சுசு)

வாழ்வு எந்திரமனைய தென்பதை யுணராத பலரும் இந்திரசித்தின் தோளிற்றபின் பதனை யுணர்ந்தாராகலால் வாட்கையினிச் சிலருவந்ததென்றார். சிலராவார் அவன்தோளிற்றதைக் காணாதவரும் கேளாதவரும்.

உ௱௬. வில்லாளராளர்கெலலாமேலவன்விளிதலோடுஞ்
செல்லாதவ்விலங்கைவேந்தற்கரசெனக்களிததேவ
ரெலலாருமதூசுவீசியேறிடவாரத்தபோது
கொல்லாதவிரதத்தாரதகடவுளர்கூட்டமொத்தார். (௫சு)

இ-ள். வில்லாளர்களுக்கெல்லாமுயர்ந்தவனாகிய இந்திரசித்துமரித்தலோடும், இலங்கை வேந்தனுக்கரசினிநடவாதென்று உவந்த தேவரெல்லாரும்,தாமுடுத்திய ஆடையையவிழ்த்துவீசி மிகவொலித்தபோது அத்தேவர், கொல்லாத விரதமுடைய புத்தமதத்தாரது கடவுளர் கூட்டத்தையொத்தார். எ-று.(௫சு)

புத்தகடவுள் ஆடையுடுத்தலின்மையறிக.

உ௱௭. வரந்தருமுதல்வன்மற்றைமான்மறிக்கரததுவளளல்
புரந்தரன்முதல்வராயநான்மறைப்புலவர்பாரி
னிரந்தரந்தோன்றினருரருளினனிறைநதநெஞ்சர்
கரந்திலரவரையுாக்கைகண்டனருரங்குங்கண்ணால். (௫எ)

இ-ள். வரங்கொடுக்கின்ற பிரமனும் மான்குட்டியைக் கரத்திலுடைய சிவனும், இந்திரன்முதல்வராகிய நான்மறையர்

சொல்லப்பட்ட தேவர்களும், அன்பால் நிறைந்த நெஞ்சராய், அவரது சரீரத்தை யொளிக்காதவராய், புவியி லெப்போதுந் தோன்றி நின்றார், குரங்குகளுங் கண்ணுற் பார்த்தன. எ-று. ()

உநஅ. காளமேகத்தைச்செக்கர்கலந்தெனக்கரியகுன்ற
நாளவெயிற்பரந்ததென்னநம்பிதன்றம்பிமார்பிற்
றோளினமேலுதிரச்செங்கேழ்ச்சுவடுதன்னுருவிற்றோன்றத்
தாளினமேல்வணங்கினானைத்தழுவினன்றனித்தொன்றில்லான். ()

இ-ள். காளமேகத்தைச் செக்கர் கலந்து என-கரியமேகத்தைச் செவ்வானங்கலந்தாற்போலவும், கரியகுன்றநாள்வெயில் பரந்தது என்ன - கரியமலைமேல சூரியனது வெயில பரந்தது போலவும், நம்பிதன தம்பிமார்பில்தோளின்மேல் உதிரச்செங் கேழ்ச் சுவடு - ஸ்ரீராமபிரானது தம்பியாகிய இலக்குமணனது மார்பின்மேலுந் தோளினமேலுமுள்ள உதிரத்தினது சிவந்த நிறமுடைய குறி, தன உருவிலதோன்ற- தனது திருமேனியில் விளங்க, தனித்து ஒன்று இல்லான் - தன்னையன்றி வேறொன் றில்லாதவனாகிய ஸ்ரீராமபிரான், தாளினமேல் வணங்கினானைத் தழுவினன் - தன்திருவடியினிடத்தில் வணங்கிய அவ்விலக்கு மணனைத் தழுவினன். எ-று. (சஅ)

## உஅ-வது. இராவணன்சோகப்படலம்



### இந்திரசித்திறந்தமையாலிராவணன்சோகமடைந் ததை யோதுகின்றபடலம்

.o:

உநக. ஓதரோதனவேலைகடந்தோராயப
பூதரோதரமபுகவெனப்போததிழி
சீதரோதக்குருதிததிரைபொரீஇத
தூதரோடினாதாதையிற்சொல்லுவார். (க)

இ-ள். தாதையில் சொல்லுவார் - இந்திரசித் திறந்ததை யிராவணனுக்குச்சொல்ல, தூதர் - தூதுவர், ஓதம் - கடலோசையையொத்த, ரோதனவேலைகடந்து உராய்- அழுகைவேலையைக்கடந்து ஒருவரோடொருவருராய்ந்து சென்று, போர்த்து

இழி-புண்வாயை நிறைத்திழிகின்ற, சீதரோதக குருதித்திரை ஒரீஇ - குளிர்ந்த கரையையுடைய இரத்தக்கடலைநீங்கி, பூதர உதரம் புகருன - மலையின் துவாரத்திற் சென்றாற்போல, (கோபுரவாயுட்சென்று) ஓடினர் - ஓடினர். எ-று. (௯)

௨௪0. சுடாக்கொழும்புகைதீவிழிதூண்டிடத
தடக்கைவாளுருவித்தருநதூதரை
மிடறறுவீசலுறாவிழுநதானரோ
கடறபெருநதிரைபோறகரஞ்சோரவே. (௫)

இ-ள். தரும்தூதரை - இந்திரசித்துமரித்தானென்று சொன்னதூதரது, மிடற்றுவீசல்உறா-கழுத்தை வீசலுற்று, கடல் பெரும்திரைபோல் கரம்சோர - கடலினது பெரிய அலையைப் போலக் கை புவியிற்சோர, விழுந்தான் - இராவணன்விழுந்தான். (௫)

இராவணன் வாளுருவிவீசத் தூதரஞ்சி யகன்றமையின் காம்புவியில் விழும்படி யவனவிழுந்தானென்பதுகருத்து.

௨௪௧. அப்புமாரியழுதியமார்பைத்த
னப்புமாரியழுந்தியவாக்கையி
னப்புமாரினணைகருமரறறுமா
லபபுமானுறறதியாவருற்றாரரோ. (௬0)

இ-ள். அம்புமாரி அழுத்தியமார்பை-அம்புவருடந்தைத்த இந்திரசித்தினுடைய மார்பை, தன் அப்புமாரி அழுத்திய ஆக்கையின் அப்பும் - தனது கண்ணீர் மழையழுந்திய தேகத்திலொற்றுவான், மார்பில் அணைக்கும் - மார்பிலணைப்பான், அரற்றும் - கதறுவான், அப்புமான்உற்றது யாவர் உற்றார் - ஆண் மகனாகிய அவ்விராவணனடைந்த துன்பத்தை யாவரடைந்தார். எ-று. (௬0)

அம்பு-அப்பு என விகாரமாயிற்று-மார்கடைக்குறை.

---

## உ௧௯-வது. படைக்காட்சிப்படலம்.

---

உ௪உ. வாட்டனினவயங்கமினனுமழையதினிருளமாட்டா
வீட்டியமுரசினார்பபையிடிப்பொடுமுழக்கமாட்டா
மீட்டினியுவமையிலலேவேலேமீச்சென்றதெனனிற
நீட்டியபடையுமாவுமியானையுநதேருஞ்செலல. (௩)

இ-ள். மழை வாள் தனின்வயங்கமின்னு - மேகங்கள் வாளாயுதத்தைப்போல மின்னலாலொளிரவிளங்கா, அதின் இருளமாட்டா - அம்மேகங்கள் அக்காலாட்படையைப்போலக் கருக்கமாட்டா, வீட்டிய முரசின் ஆர்ப்பை இடிப்பொடுமுழக்க மாட்டா - அம்மேகஙகள் ஒருங்கு சேர்த்தபேரிகை யொலியை யிடிமுழக்கத்தால் முழககமாட்டா, நீட்டிய படையும மாவும் யானையும் தேரும் செல்ல - நீட்டிய ஆயுதமுடைய காலாட்படைகளுங் குதிரைகளும் யானைகளுந் தேர்களுஞ் செல்ல, வேலைமீச் சென்றது என்னில் - கடல் புவிமேற்சென்றதென்றாலல்லாமல், இனி மீட்டு உவமைஇல்லை - இனி வேறுவமையில்லை. எ-று. (௩)

உ௪௩. உலகினுக்குலகுபோய்பபோயொன்றினென்றொதுங்கலுறற
துலைவருந்தானைமேனமேலெழுநதது துடாநதுசுற்ற
நிலவினுககிறையுமீனுநீங்கினநிமிரநதுநினறு
ரலரியுமுநதுசெலலுமாறுநீததஞ்சியப்பால. (௪)

இ-ள். துலைவு அரும் தானை மேல் மேல் எழுந்தது துடர்ந்து சுற்ற - ஒழிதலரிதாகிய சேனை மேன்மேலெழுந்ததாய்த் தொடர்ந்து சுற்றலும், அலரியும் முந்துசெல்லும ஆறுநீத்து அஞ்சி - சூரியனும் முன்னஞ் செல்லும்படியான வழியைநீத்துப் படைசெலலுதலா லஞ்ச, அப்பால் - அப்பால், உலகினுக்கு உலகு போய்ப்போய் ஒன்றின் ஒன்று ஒதுங்கல்உற்ற - இவ்வுலகினுக்கு மேலுள்ள வுலகங்களொன்றின்பின்னொன்று சென்று சேர்ந்தொன்றாகிப் பதுங்கலுற்றன, நிலவினுக்கு இறையும் மீனும் நீங்கின - நிலவரசாகிய மதியும் நக்ஷத்திரங்களும் போயின, நிமிர்ந்துநின்றார் - இராக்கதர் நிமிர்ந்துநின்றார் எ-று. (௪)

---

# ௩௦-வது. மூலபெலவதைப்படலம்.

———:o ———

உ௪௪. அடங்குவேலைகளண்டத்தினகத்தனமலையு
மடங்குமன்னுயிரனைத்துமவ்வரைப்பிடையவைபோ
லடங்குமேமற்றப்பெரும்படையிரும்படையாக்கை
யடங்குமாயவன்குறளுருத்தன்மையினவரால். (௯)

இ-ள். அண்டத்தின் அகத்தன - அண்டத்திலுள்ளனவாகிய, அடங்கு வேலைகள் - கரையுளடங்குகின்ற கடல்களும், மலையும் - மலைகளும், மன்னுயிர் அனைத்தும் அவ்வரைப்பிடை அடங்கும் - நிலைபெற்ற வுயிர்களனைத்தும் அவ்வுத்த பூமியிலடங்காநிற்கும், அவைபோல் - அவற்றைப்போல, அப்பெரும்படை இரும்படையாக்கை அடங்குமே - அப்பெரிய ஆயுதங்களையுடைய மிகுந்த சேனையிலுள்ள இராக்கதர் சரீரங்களடங்குமா, (அடங்காதாயினும்) மாயவன்குறள் உருத்தன்மையினவரால் அடங்கும் - அவ்விராக்கதர் மாயோனது வாமனவுருத்தன்மையினையுடையரானமையால் அவர் சரீரங்களடங்கும். எ-று. ()

உ௪௫. மால்வரைக்குலம்பரலெனமழைக்குலஞ்சிலம்பக்
காலவரைக்குலஞ்சிலம்புகொண்டசைத்தபைங்கழலார்
மேலவரைப்படாகலுழன்வன்காற்றெனும்விசையோர்
நாலவரைக்கொணர்ந்துடன்பிணித்தாலன்னநடையார். (அ)

இ-ள். மழைக்குலம் சிலம்ப - மேகக்கூட்டங்க ளொலிக்க, மால்வரைக்குலம் பரல்என - பெரிய மலைக்கூட்டங்களைப் பருக்கைக்கற் போலப்பெய்த, குலம்சிலம்பு - சிரேட்டமானசிலம்பை, கால்வரைகொண்டு அசைத்த பைங்கழலார் - காலினிடத்திற் கொண்டு கட்டிய வீரக்கழலுடையார், மேல்வரைப்படர் கலுழன்வன்காற்று என்னும் விசையோர் - மேலுள்ளவரையிலுஞ் செல்லுகின்ற கருடன் வலியவாயுவென்னும் விசையுடையோர்களில், நால்வரைக் கொணர்ந்து உடன்பிணித்தால் அன்னநடையார் - நான்குபேர்களையுடன் கொணர்ந்து காலில்கட்டினாற்போன்ற நடையையுடையார். எ - று. (அ)

உ௪௬. வழங்குபலபடைமீனதுமதகரிமகர
முழங்குகின்றதுமூரித்திரைப்பரியதுமுரசந்
தழங்குபேரொலிக்களியதுதறுகணமாநிருதர்
புழுங்குவெஞ்சினச்சறவதுநிறைபடைப்புணரி. (௨௦)

இ-ள். நிறைபடைப்புணரி - நிறைந்த சேனையாகியகடல், வழங்கு பல்படைமீனது - வீசுகின்ற பலஆயுதங்களாகிய மீன்களையுடையது, மதகரி மகரம் முழங்குகின்றது - மதமுடைய யானைகளாகிய மகரமீன்கள் முழங்குகின்றது, முரிதிரைப்பரியது-தோன்றியழிகின்ற அலையாகியகுதிரைகளையுடையது, முரசம் தழங்குபேர் ஒலிகளியது - முரசொலியாகிய மிகுந்த வொலியையுடையது, தறுகண் மாநிருதர் புழுங்கு வெம்சினச்சுறவது - அஞ்சாமையுடைய (யாக்கையால்) பெரியஇராக்கதராகிய புழுங்குகின்ற வெவ்விய கோவமுடைய சுறாமீன்களையுடையது, எ - று. (௨0)

௨௪௭. சாம்பனைவதனநோககிவாலிசேயநிவுசானறேய்
பாம்பணையமலன்மற்றிவ்விராமனெனறெமகருப்பண்டே
யேமபலவநசெய்தச்சொலலிதநேற்றிறையலலையோநீ
யாமபலம்பகைஞன்றனறேடிந்திரமமைந்தோனனறய். (௪௫)

இ-ள். அம் ஆம்பல்பகைஞன் தன்றேடு ஐந்திரம் அமைந்தோன் அன்றய்-அழகிய அல்லிமலர்க்குப்பகைஞறகியசூரியறேலேஐந்திரவியாகரணத்தைதக்கற்றமைந்த அநுமானையொப்பாய்,

௨௪அ. அஞ்சிறைம்பழியும்பூண்டோமம்புவியாண்டுமாவி
துஞ்சுமாறனறிவாழவொண்ணுமோநாண்மேறசேறனறி
நஞ்சுவாயிட்டாலனனதமிர்தனறேநம்மையம்மா
தஞ்சமெனறுணர்ந்தவீராதனிமையிறசாதனன்றே. (௪௭)

இ - ள். நஞ்சுவாய்இட்டால் அன்னது அமிர்து அன்றே - விடத்தை வாயிலிட்டா லன்னது அமுதமன்றே, நம்மைத்தஞ்சமென்று உணர்ந்தவீரர் தனிமையில - நம்மையாதாரமென்று கொண்ட வீரர்களைத்தனிமையில் விடுவதினும், சாதல்நன்று - நாமிறத்தல் நன்று. (௪௭)

௨௪௯. நாணத்தாற்சிறிதுபோதுநல்கினனிருந்துபின்னும்
தூணெத்ததிரடோளவீரதோனறியவரக்கர்வீரங்
காணத்தானிற்கத்தானக்கறைமிடற்றவர்க்குமாமோ
கோணறபூவுண்ணும்வாட்கைக்குரங்கின்மேற்குற்றமுண்டோ. (௫0)

இ-ள். நாணத்தால் சிறிதுபோது நல்கினன் இருந்து - வெட்கத்தால் சிறிதுநேரம் பேசாதிருந்தனன் அவ்வாறிருந்து,

கோணற்பூவுக்கு இடக்காடக்கலாய்ப் பொருளுரைப்பார்.

௨௫0. அம்பரங்கடொடுங்கொடியாடையு
மம்பரங்களொடுங்களியானைக
ளம்பரங்கவழுந்தினசோரியி
னம்பரங்கமருங்கலமாழ்ந்தென. (௧௪௯)

இ-ள். அரங்கம் - திட்டிவேரத்திலுள்ள, அம்பு-புனலில், அருமகலம் ஆழ்ந்து என - அரியமரக்கலம் ஆழ்ந்தாற்போல, அம்பு அரங்க - அம்புகள்தைக்க, களியானைகள்-செருக்குடைய யானைகள், அம்பரங்கள் தொடும கொடி ஆடையும - ஆகாயங்களைத் தொடுகின்ற கொடிச்சீலைகளோடும, அமபரங்களோடும் - அழகிய மேற்பாரங்களோடும், சோரியின் அழுந்தின - உதிரத்திலழுந்தின. (௧௧௯)

௨௫௧. கேடகங்கணவங்கையொடுங்கின
கேடகங்டுணிந்துகிடந்தன
கேடகங்கிளாகினறகளதென்க
கேடகங்கணமறிந்துகிடந்தன. (௧௨௧)

இ-ள். கங்கண அம்கை ஒடுங்கின கேடகங்கள் துணிந்து - கங்கணமணிந்த அழகிய கையிலொடுங்கினவாகிய கேடகங்கள் துணியப்பட்டு, கேடம் - கிளியாற்றில், கிடந்தன - கிடந்தன, கேடு அகம் கிளர்கின்ற களத்து என - கேடுதனனுள்ளே அதிகரிக்கின்ற யுத்தகளத்தைப்போல, கேடம கம்கள் மறிந்துகிடந்தன-மலைசெறிந்த வூர்களிலதலைகளுருண்டுகிடந்தன. எ-று.()

௨௫௨. அஙகவெங்களத்தற்றழிதேரொடு
மங்கவெஙகளத்தற்றவியுற்றவாற
புங்கவன்கணைப்புட்டில்பொருந்திய
புங்கவன்கணைபபுற்றரவம்பொர. (௧௨௨)

இ-ள். புங்கம்வன்கணைப்புட்டில் பொருந்திய - குதையையுடைய வலியசரக்கூட்டிற் பொருந்திய, புஙகவன்கணைப்புற்று அரவம் - ஸ்ரீராமபிரானெய்த அம்பாகிய புற்றில் வதிகின்ற சர்ப்பம், அங்கம்வெம்களத்து - அங்கமாகிய வெவ்விய கழுத்துக்களை, பொர - தீண்ட, அஙகு அவ்வெம்களத்து அற்று அழிதேரொடும் - அவ்விடத்து அவ்வெவ்விய யுததகளத்தி லொடிந்தழிந்த தேர்களோடும், அற்று அவி உற்ற-குதிரைகள் அக்கழுத்துக்களற்றவிந்தன. எ - று. (௧௨௨

உ௫௩. தினகரனையனயகொடிகடிசைகளொடு
மனகசனியிலகுவயிரமுளவனுக
வனகனொடுமமரினமுடுகியெதிரவெழு
கனகவரைபொருவுகடியபரியிரதம். (௧௯௧)

இ-ள். அனகனொடும் அமரில் முடுகி எதிரஎழு - ஸ்ரீராம பிரானொடும் போரில முடிகியெதிர வெழுகின்ற, கனகவரை பொருவு கடியபரி இரதம் - மேருகிரியை யொப்பாகின்ற வேகத்தையுடைய குதிரைபூண்டதேர்கள், தினகரனை அனைய - (ஒளியால்) சூரியனை யொத்தனவாய், திசைகளொடு மன் அகம் சனி இலகு - திக்குககளொடு நிலைபெற்ற இடமுடைய சனிமண்டலத்திலும் விளங்குகின்ற, கொடிகள்-கொடிகளையுடையனவாய், வயிரம் உளஅனுக - சோவமுள்ளனவாய்வர. எ-று. (௧௯௧)

உ௫௪. பாறுபடுசிறகுகழுமுபகழிபட
நீறுபடுமிரதநிரையினுடறவிர
வேறுபடர்படரவிரவிசுடர்வலைய
மாறுபடவுலகின்மலைகளளறுபட. (௧௯௨)

இ-ள். பாறுபடுசிறகு கழுமுபகழிபட - பருந்திலுண்டாகிய இறகுகளைக்கட்டிய கணைகள்தைக்க, நீறுபடும் இரதநிரையின் - சாம்பராகின்ற தேர்வரிசைகளி லிருந்தோராது, உடல் தவிர-உடல்களொழிய, ஏறுபடர்படர - சிங்கம்போன்ற வீரர்கள்வர, இரவிசுடர வலையம்மாறுபட - சூரியனுகிய ஒளிபொருந்திய வட்டம் வேறுபட, உலகில் மலைகள அளறுபட - உலகிலுள்ள மலைகள் துகளாகிச சேறுண்டாக. எ-று. (௧௯௨)

உ௫௫. விட்டியவழங்கியவெம்படையிற
சுட்டியகிமிரந்தசுடர்ச்சுடரும்
கட்டியுமொருங்குகலந்தெழலா
லுட்டியுறவெந்தனவேழுலகும். (௧௯௩)

இ-ள். விண்டிய வழங்கிய வெம்படையில் - ஆகாயந்தீயும்படி வழங்கிய வெவ்விய ஆயுதங்களால், சுட்டு ஈயம் கிமிர்ந்த சுடர்ச்சுடரும் - சுடப்பட்டுருக்கிய ஈயம்போல மிகுந்த வொளியுடைய அக்கினியும், கண்தீயும் ஒருங்குகலந்து எழலால்-விழித்தீயுமொன்றாய்க் கலந்தெழுதலால், உள்தீ உற ஏழ் உலகும்

வெந்தன - உள்ளே நெருப்போங்க மேலேழுலகங்களும் வெந்தன, எ-று. (௧௯௨)

அநுமானைச்சொலலியது.

௨௫௬. நின்றுருடனின்று நிமிரா நீயலே
சென்றுரெதிரா சென்றுசினைத்ததிடலாற
றன்றுதையையோரவுற்றனமகனே
கொன்றுனவனேயிவனென்றுகொளா. (௨௦௮)

இ-ள். தன் தாதையை - தனது தந்தையாகிய பிரமனை, ஓர் உற்று - அறிந்து, கொன்றான் - கொன்ற, தன் மகன் - தன மகனாகிய, அவனே - அவ்வுருத்திரனே, இவன் என்று கொளா - இவனவனென்றுகொண்டு (௨௦௮)

௨௫௭. ஊனேறுபடைகைவீரரெதிரெதிரூருந்தோறுங்
கூனேறுசிலையுந்தானுங்குதிக்கின்றகடுப்பினகொட்பால
வானேறினாகடேருமலைகின்றவயவாதேருந
தானேறிவந்ததேரேயாக்கினன்றனியேறனனை. (௨௧௫)

இ-ள். தனி ஏறு அன்னான் - ஒப்பற்ற சிங்கத்தையொத்த ஸ்ரீராமபிரான், ஊன் ஏறு படைக்கைவீரர் எதிர் எதிர் ஊரும் தோறும் - தசைபொருந்திய படைகளைக் கையிலுடைய வீரர்கள் தனக்கெதிரெதிர்த்து வருந்தோறும், கூன் ஏறு சிலையும் தானும் குதிக்கின்ற கடுப்பின் கொட்பால் - வளைந்த வில்லுந் தானுங் குதிக்கின்ற வேகத்தின் சுழற்சியால், வான் ஏறினார்கள் தேரும் மலைகின்ற வயவர்தேரும் - இறந்து விண்ணேறிய வீரரது தேர்களையும் பொருகின்ற வீரரது தேர்களையும, தான் ஏறிவந்த தேர் ஆக்கினான் - தானேறிவந்த தேராகச்செய்தான். எ-று. (௨௧௫)

தானேறிவந்த தேராவது பூமி. அரக்கர் தேர்களைப் புவியோடு வேற்றுமைதெரியாது துகளாக்கினனென்பது கருத்து.

௨௫௮. தீமொய்த்தவளையசெங்கணரக்கரைமுழுதுஞ்சிந்திப்
பூமொய்த்தகரததராகவிண்ணவர்போற்றினமுன
பேய்மொய்த்தநரிசவீண்டிப்பெரும்பிணம்பிறங்கித்தோன்று
மீமத்தட்டமியனின்றகறைமிடற்றிறைவனொத்தான. (௨௨௯)

இ-ள். விண்ணவர் பூமொய்த்தகரத்தராகிபோற்ற நின்றான் - தேவர்கள் மலர்களைகொண்ட கையுடையராகி துதிக்க நின்ற ஸ்ரீராமபிரான், (உஉகூ)

உருக. அண்டமர்க்களமும்வீய்ந்தவரக்கரெவ்வுயிருமாகக
கொண்டதோருருவந்தன்னாலிறுதிநாள்வந்துகூட
மணடிநாணமறித்துஙகாட்டமனனுயிரனைத்துமவாரி
யுண்டவனருளேயானதனனொருமூர்த்தியொத்தான். (உநூ0)

இ-ள். அமர்க்களம் - யுத்தபூமி, அண்டமும் - அண்டங்களும், வீய்ந்த அரக்கா எவ்வுயிரும் ஆக-மரித்த இராக்கத ரெல்லாவுயிர்களுமாக,

---

## ஙக-வது. வேலேற்றபடலம்.

# இராவணன் விபீடணுழ்வான்மேலெறிந்த வேலாயுதத்தை இளையபெருமாள் தானேற்றுக்கொண்டதைக் கூறுகின்றபடலம்.

உகூ0. தூவியம்பெடையரியினமரிதரச்சூழித
தூவியமபெடைசோர்நதெனச்சொரியுடல்சுரிப்ப
மேவியம்படைபடப்படகுருதியினவீழ்ந்த
மேவியம்படைக்கடலிடைகருடரொடுமிதநத (அ)

இ-ள். அம் - அழகிய, பண்டைக்கடல் இடை - சேனைக்கடலில், மேவி - யானைகள சேர்ந்து, அம்பு எடை-ஸ்ரீராமபிரான் அம்பையெடுக்கையில், தூவி - சிறகுகளையுடைய, அம் - அழகிய, பெடை இனம் - பெண்வண்டுக்கூட்டமும, அரி இனம்-ஆண்வண்டுக்கூட்டமும, மரிதர-சாக, சூழி-அவ்யானைகள் தாமணிந்த முகபடாத்தை, தூவி-எறிந்து, சோர்ந்தன - சோர்ந்து, வியம் - பெருமை, மே - பொருந்திய, படைபடப்பட - அவ்வம்புகள் தைக்கத்தைக்க, குருதியில் - உதிரத்தில், சொரிஉடல் சுரிப்ப - இரத்தத்தைச் சொரிகின்ற தமதுடலழுந்த, வீழ்ந்த-விழுந்தனவாய், குடரொடும் மிதந்த - குடலோடும் மிதந்தன. எ-று (அ)

௨௬௧. கண்டிறந்தனர்க்ணவர்தம்முகத்தவர்முறுவல்
கண்டிறந்தனாமடந்தையருயிரொடுங்கலந்தார்
பணடிறந்தனபழமபுணர்வகமபுகப்பன்னிப்
பணடிறநதனபுலம்பொலிசிலம்பொலிபனிபப. (௧௯)

இ - ள். மடந்தையர் - மகளிர், கண்திறந்தனர் கணவர்தம் முகத்து அவா முறுவலகண்டு - கண்விழித்தனராகிய தமது கணவருடைய முகத்தி லவரது முறுவலைப்பாாத்து, பண்டு இறந்தன பழம்புணர்வு அகம்புகப்பன்னி - முன்னனுபவித்துக்கழிந்தனவாகிய பழையபுணர்ச்சிகள் மனத்தில வரவெடுத்துக்கூறி, பண்திறந்து அன - நிறை நரம்புளள வீணையொலித்தாற்போல, புலம்பொலி சிலம்பொலி பனிப்ப - புலமபொலியுஞ் சிலம்பொலியு மியம்ப, இறந்தனர்-மரித்தனராய், உயிரொடும் கலந்தார் - அககணவருயிரோடுஞ் சேர்ந்தார். எ-று (௧௯)

௨௬௨, கடவுண்மாபபடைதொடுக்கினமறறவைமுறறுங்கடக்க
விடவுமாறறவுமவலலனேலயாரையும்வெலலுமு
தடவுமாற்றலைககூறறையுநதனமையனைப்போலச
சுடவுமாற்றுமெவவுலகையுமவனுககுநதோலான. (௨௧)

இ-ள். கடவுள் மாப்படைதொடுக்கின் - பெருமைபொருந்திய தெய்வவாளிகளை யானதொடுக்கின், அவைமுற்றும்கடக்க-அக்கணைகளை முழுதும் நீக்கவும், விடவும் - அம்புகளைவிடவும், ஆற்றவும் வல்லனேல் - மிகுதியும் வல்லனாயின், யாரையும் வெல்லும் - எல்லாரையும் வெலலுவான், கூற்றையும் தலைதடவும்-எமனையுந் தலையைத்தடவுவான், தமையனைப்போல எவ்வுலகையும் சுடவும் ஆற்றும் - தமையனாகிய ஸ்ரீராமபிரானைப்போல எல்லாவுலகங்களையுஞ் சுடவுஞ்செய்வான், அவனுக்கும் தோலான் - அவ்விராமபிரானுக்குந் தோலான. (௨௧)

௨௬௩. எய்தவாளியுமேவினபடைக்கலம்யாவுஞ்
செய்யமாதவத்தொருவனைச்சிறுதொழிறநீயோன்
வைதவைவினிலொழிந்தனவீடணன்மாணடா
னுய்தலில்லையெனறுமபரும்பெருமனமுலைந்தார், (௨அ)

இ-ள். சிறுதொழில் தீயோன் வைதவைவினில் ஒழிந்தன-புன்றொழிலுடைய தீயோன் வைதவை வினைப்போலத் தேகத்தில் படாதொழிந்தன, (௨அ)

## ௬உ-வது. களங்காண்படலம்.

# வானரவீரர்கள் போர்க்களத்தைப்பார்த்ததைக் கூறுகின்றபடலம்.

விபீடணாழ்வான் வானரவீரர்களுக்குக் காட்டிச்சொல்லியது.

உ௬௪. காகபபந்தற்செங்களமெங்குஞ்செறிகாலம்
மோகத்தம்பிற்பொன்றினவேனுமுடலொன்றி
மேகச்சங்கந்தொக்கனவேழும்வெளியின்மை
நாகக்குன்றமநின்றனகாண்மினமரங்காள். (௬)

இ-ள். நமரங்காள் - நம்மவர்களே, செங்களம் எங்கும் காகப்பந்தல் செறிகாலம் - இரத்தத்தாற் சிவந்த யுத்தகளமெங்கும் காகங்களின் பந்தல் நெருங்கிய இக்காலத்தில், மோகத்து அம்பில் பொன்றின ஏனும்-மாயையுடைய அம்புகளால் மரித்தனவாயினும், மேகச்சங்கம் ஏழும் தொக்கு அன வெளி இன்மை - மேகக்கூட்டமேழுமொன்று சேர்ந்தாற்போல வெளியில்லாதபடி, உடல் ஒன்றி - உடல்கள்சேர்ந்து, நாகக்குன்றம் நின்றன காண்மின்-யானைகளாகிய மலைகள் நின்றன பார்மின். எ-று

இதுவுமது.

உ௬௫. பூவாய்வாளிச்செல்லெறிகாலைப்பரிபொன்றக்
கோவாய்வன்பாலவெண்கொடிதிண்பாயொடுகூட
மாவாய்திண்டேர்மண்டுதலானீர்மறிவேலை
நாவாயமானசெல்வனகாண்மினமரங்காள். (௭)

இ-ள். நமரங்காள் - நம்மவர்களே, பூவாய் வாளிச்செல் எறிகாலைப் பரிபொன்ற - கூர்மைவாய்ந்த அம்புகளாகிய இடிகள் விழுகின்றபொழுது (பூட்டிய) குதிரைகள் சாக, கோவாய் வன்பால் வெண்கொடி - ஆகாயத்தையளாவிய வலியதன்மையுடைய வெள்ளிய கொடிகளைக்கட்டிய, மாவாய் திண்தேர்மண்டுதலால்-பெருமைவாய்ந்த வலியதேர்கள் (உதிரவெள்ளத்தில்) செல்லுதலால், நீர்மறிவேலை - அலைமடங்குகின்றகடலில், திண் பாயொடு கூட - வலியபாய்மரத்தோடுகூட, நாவாய் மானச் செல்வன காண்மின் - நாவாயைப்போலச் செல்லுகின்றன பார்மின். எ-று. (௭)

இதுவுமது.

௨௬௬. கடக்காரெனனப்பொங்குகவந்ததொடுகைக
டடககாநிற்கும்பேயிலயத்தினொழில்பூணட
மட்க்கோவில்லாவார்படிமககூததமைவிபபா
னடக்காலகாட்டுஙகண்ணுளரொபபாம்நமரங்காள். (௧௧)

இ - ள். நமரங்காள - நம்மவாகளே, கடம்கார் என்னப் பொங்கு கவந்தத்தொடு - உடல் மேகமென்று சொல்லும்படி கறுதது மிரைப்பாலாடுகின்ற கவந்தஙகளோடு, கைகள் துடக் காநிற்கும் பேய் இலயத்தின் தொழில்பூண்ட-காங்களைப்பிடித்து நிற்கின்ற பிசாசுகள் கூத்தின் றொழிலைகொண்டன, மடக்கு இல்லா வார்படி மக்கூத்து அமைவிப்பான்-முடககிலலாத நேர் மைபொருந்திய வெறியாட்டாகிய கூத்தைக் கறபிக்குமபொரு ட்டு, நடம கால்காட்டும் கண்ணுளர் ஒப்பாம் - அப்பிசாசுகள் நடனத்தைக் காலாற் காட்டுகின்ற கூததர்களை யொப்பாகும் பாரீர். எ-று. (௧௧)

மிரைப்பாலாடுகின்ற கவந்தங்களும் பேயகளுங் கூத்தாட் டுவோரையும் ஆடுவோரையு மொப்பாகுமெனபது கருத்து.

இதுவுமது.

௨௬௭. மழுவிற்கூாவாய்வனபலிடுகக்கினவயவீரர்
குழுவிறகொணடாாநாடிதுடககப்பொறிகூட்டத
தழுவிகவெகாளளக்கள்ளமனபபேயவைதளளி
நழுவிசசெலலாவியல்பினகாணமினமரங்காள். (௧௨)

இ-ள். நம்மவர்களே மழுவாயுதத்தைப்போன்ற கூர்மை பொருநதிய வலிய பலவிடுகக்கினையுடைய வெற்றிபொருந்தியமரி த்த வீரர்களாகிய, கூட்டமானவர்களுடைய நாடிகள் மிரைத் துத் துடக்கப்பொறிகளைச் சேர்க்க, களளமனத்தையுடைய பே ய்களை அவ்வீரருடலகள் தழுவிக்கொள்ள அபபேய்கள் அவ்வு டல்களைத்தள்ளி, நழுவிச்செல்லாத தன்மையுடையனபார்மின். எ-று. (௧௨)

இதுவுமது.

௨௬௮. நெடும்படைவாளுஞ்சிலுழுநிணச்சேற்றினுதிரநீரிறைந்தகாப்பிற்
கடுமபகடுபடிதோய்நதகடுமபரம்பினினமள்ளாயாரநதகையிற்
படுங்கமலமலாநாறுமுடிபரநதபெருங்கிடக்கைபரநதபண்ணைத
தடம்பணையினறுமபழனநதழுவினதேடனயபொலியுநதகையுங்கா
[ணமின். (௨௩)

இ-ள். நெடும்படைவாள் நாஞ்சில் உழ-நெடிய ஆயுதமாகிய வாள்கலப்பையைப்போல வுழ, நிணச்சேற்றின் உதிர நீர் நிறைந்த காப்பில-நிணமாகிய சேற்றினையுடைய இரத்தப்புனல் நிறைந்த காப்பினையுடைய, கடும்பகடு படிதோய்ந்த - வேகமுடைய எருமையேற்றுக்களைப்போன்ற(யானைகள்) கிடந்த,கடும்பரம் பின் இனமள்ளா பரந்தகையில்-கடுமையான பரம்படிக்கின்ற தொழிலினையுடைய கூட்டமாகிய வுழவர்கள் பரந்த இருபுறத்திலும்,படும் கமலம் மலர்நாறும் முடிபரந்த பெரும் கிடக்கைபரந்த பண்ணை-முளைத்த தாமரைமலராகிய நாற்றுமுடிகள் பரந்து கிடந்த மிகுந்த மகளிர்கூட்டத்தையுடைய, தடம்பணையின் நறும்பழனம் தழுவினது என - பெரியவயல்களையுடைய நறுவிய மருதநிலத்தை யொத்ததென்று சொல்லும்படி, பொலியும் தகையும் காண்மின் - பொலிகின்ற தகைமையையும் பார்ப்பீர். எ-று. (உ௫)

---

## ௩௩-வது. தேரேறுபடலம்.

## இராவணனும் ஸ்ரீராமபிரானும் தேரேறியதைக் கூறுகின்றபடலம்.

இராவணன்ஆடையுடுத்தியதைக்கூறியது.

உ௬௬. மறைவிரித்தனனமாடுறுமானமாக்கலுழன்
சிறைவிரித்தன்னகொய்சகமருங்குறசேர்த்தி
முறைவிரித்தெனமுறுக்கியகோசிகமுறையே
பிறைவிரித்தன்னவெள்ளெயிறரவமும்பிணித்து. (௬)

இ-ள். மறைவிரித்து அன்ன - வேதப்பொருள்களை விரித்தாற்போன்ற, மாடு உறு மானம் ஆக்கலுழன் - பக்கங்களிற் பொருந்திய பெருமையும் வியப்புமுடைய கருடனது, சிறைவிரித்து அன்னகொய்சகம் மருங்கு உறச்சேர்த்தி - சிறகுகளை விரித்தாற்போன்ற கொய்சகத்தை யிடையிற்பொருந்தச் சேர்த்தி, முறைவிரித்து என முறுக்கிய கோசிகம் முறையே - அக்கொய்சகத்தை முறையாக விரித்தாற்போல முறுக்கிவிட்ட பட்

டாடையை முறையாக, பிறைவிரித்து அன்னவெள் எயிற்று அரவமும் பிணித்து - இளஞ்சந்திரனை விரித்துவைத்தாற்போன்றுள்ள வெள்ளிய பற்களையுடைய பாம்பையும் அப்பட்டாடைவிழாமற் கட்டி. எ-று. (௬)

கருடனது திருமேனிவேதங்களானமையின மறைவிரித்தன்ன என்றார்.

௨௭௦. தன்னகவசத்துருவுதங்கவொருதனனிற
பின்னகவசததபொருளிலலைபெரியோனை
மன்னகவசதது றவரிநதெனவென்கோ
வினனகவசததையுமொரீசனெனலாமால. (௩௮)

இ-ள். எல்லாவற்றையுந் தன்னிடத்திற் கொண்ட ஸ்ரீராமபிரானைக் கவசந் தன்னிடத்திற்கொண்டமையா லதையுமொருஈசனென்று சொல்லலாமென்பது (௩௮)

இநதிரனதுதேரைச்சொல்லியது.

௨௭௧. ஆண்டிஞெடுநாளுமிடுதிஙகளிவையெனறு
மீண்டனவுமேலனவுமவிட்டுவிரிதட்டின
பூணடுளதுதாரகைமணிபபொருவுகோவை
நீணடபுனைதாரினதுநின்றுலவுகுன்றின. (௪௪)

இ-ள். ஆண்டிஞெடு * * * நாளும் இடுதிஙகள் இவை என்றும் - நக்ஷத்திரங்களும் ஒளியைச்செய்கின்ற மதியுமாகிய விவையென்று சொல்லும்படியானவற்றையும், ஈண்டனவும் மேலனவும் விட்டு விரிதட்டின் - ஒருங்குசேர்ந்தனவற்றையும் அவற்றிற்கு மேலுள்ளனவற்றையுங் கடந்தகன்ற தட்டில், பூண்டு உள்ளது - அணிந்துள்ளதாகிய, தாரகைபொருவு - நக்ஷத்திரங்களையொத்த, மணி - முத்துக்களாலாகிய, கோவை - வரிசையுடைய, நீண்ட புனைதாரினது - நீண்ட அலங்கரித்த மாலையையுடையது, நின்று உலவுகுன்றின் - நிலைபெற்றுச் சஞ்சரிக்கின்ற மலையினையொத்தது. எ - று. (௪௪)

மாதலிஸ்ரீராகவபிரானுக்குச்சொலலியது.

௨௭௨. கண்ணுமனமும்நெடியகாலுமிவைகண்டா
லுண்ணும்விசையாலுணர்வுபிற்படவோடும்
விண்ணுநிலனும்மெனவிசேடமிலதஃதே
யெண்ணுநெடுநீரினுநெருப்பினுடையுமெந்தாய். (௫௬)

இ-ள். எந்தாய் - எந்தாய், கண்ணும் மனமும் நெடியகாலும் இவைகண்டால் - கண்ணு மனமு நெடியகாற்று மென்னுமிவற்றை நோக்கின், உண்ணும் விசையால் உணர்வு பிற்பட ஓடும் - அவற்றை வெல்லுகின்ற விசையோ டறிவுபிற்பட வேகமாயோடும், விண்ணும நிலனும என விசேடம் இலது - விண்ணுலகினு மண்ணுலகினும் அவ்வேகமாயோடுமென்று சொல்லுவது விசேடமிலது, அஃது எண்ணும் நெடுநீரினும் நெருப்பினிடையும் - எண்ணுகின்ற நெடிய புனலினு நெருப்பினும் அவ்வாறே யோடும். எ-று. (௬௯)

---

## ௬௪-வது. இராவணன்வதைப்படலம்.

௨௭௩. கண்டசங்கரனன்முகனகைததலம
விணடசஙகிடவணடமவெடிததிட
வணடசஙகததமராாதமாாபபெலா
முணடசங்கையிராவணனூதினன. (௨அ)

இ-ள். கண்டசங்கரன் நான்முகன் கைத்தலம்விண்டு அசங்கிட - யுத்தம்பார்த்த சிவனும் பிரமனுங கூப்பிய கைவிரிந்து நடுங்கிடவும், அண்டம்வெடித்திட - அண்டம வெடித்திடவும், அண்டம் சங்கத்து அமரர்தம ஆர்ப்பு எல்லாம் உண்ட சங்கை இராவணன் ஊதினன் - விண்ணுலகில் தேவர்கூட்டத்தி னொலியெல்லாவற்றையுந் தொலைத்த சங்கத்தையெடுத்திராவணனூதினன். எ-று. (௨அ)

௨௭௪. தூணுடைநிரைபுரைகரமவைதொறுமக்
கோணுடைமலைநிகாசிலையிடைகுறையச்
சேணுடைநிகாசணைசிதறினனுணாவோ
னூணுடையுயிாதொறுமுறையுறமொருவன். (அச)

இ-ள். உணர்வோடு ஊண் உடை உயிர்தொறும் உறை உறும் ஒருவன் - அறிவோடுணவுடைய வுயிர்கள்தோறுமுறைகின்ற ஸ்ரீராமபிரான், தூண் உடை நிரைபுரை கரம் அவைதொறும் - தூணுடைய வரிசையை யொத்த கரங்களாகிய அவைகள் தோறுமிருக்கின்ற, அக்கோண் உடைமலை நிகர்சிலை இடை

குறைய - அவ்வளவுடைய மலையையொத்த விற்களினிடையி லொடிய, சேண் உடை நிகர்கணை சிதறினன்-நீளமுடையதகுதி யான அம்புகளை யெய்தனன். எ - று. (அக)

உஎரு. தேயநின்றவன்சிலைவலங்காட்டினனேநீராப்
பேயையெனபலதுரப்பதிங்கிவனபிழையாம
லாயதன்பெரும்படையொடுமடுகளததவிய
மாயையினபடைதொடுபயனெனறிராவணனமதித்தான. (கoக)

இ-ள். தேயநின்றவன் - தண்டந்தேய்ந்து நிரப் பார்த்து நின்ற இராவணன், சிலைவலம் காட்டினன் - இராமன தனது தனுவலியைக் காட்டினனென்று நினைந்து, நீராப்பலபேயைத் துரப்பது என்-நம்மைவிட்டு நீங்காத வாளிகளாகிய பல பிசாசு களை விடுவதால் யாதுபயன், (கoக)

உஎசு. பாரிடநதுகொணடெழுநதன பாம்பெனும்படிய
பாரிடநதுடாநதெழுநதனமலையனபடியப
பேரிடம்பெறலரிதினிவிசும்பெனபபிறநத
பேரிடங்கரினகொடுங்குழையணிநதனபேய்கள. (ககசு)

இ-ள் பாரிடம் - பூதங்கள், பார் இடந்துகொண்டு எழுந் தன பாம்பு என்னும்படிய - புவியைப்பிளந்துகொண்டெழுந்த பாம்புகளென்று சொல்லுமபடியனவாயும், மலை அனபடிய-மலை களையொத்தனவென்று சொல்லும்படியனவாயும், துடர்ந்து எழுந்தன-துடர்ந்தெழுந்தன, பேர் இடங்கரின் கொடும்குழை அணிந்தன பேய்கள் - பெரியமுதலைபோன்ற வடிவினையுடைய வளைந்த குண்டலஙகளை யணிந்த பேய்கள், பேர இடம் பெறல் அரிது இனி விசும்பு எனப் பிறந்த - சஞ்சரிக்குமிடம் புவியிற் பெறுதலுக் கில்லையாக வினி னிச் சஞ்சரிக்குமிட மாகாயமாகு மென்று தோன்றின. எ-று. (ககசு)

உஎஎ. தாமசத்தினிறபிறநதவாறநதெறுநதகையா
தாமசத்தினிறசெல்கிலாச்சதுமுகததவற்குத
தாமசததிரஞ்செய்பவர்பரந்தனர்தரளத
தாமசத்திரஞ்சிததிரமபொருந்தினர்தயங்க. (ககஎ)

இ-ள். தாமசத்தினில் பிறந்தவர் - தாமதகுணத்தோடு பிறந்தவர்களாய், அறமதெறும் தகையர்-அறங்களையழிக்கின்ற

தன்மையுடையவர்களாய், தாம் - தாங்கள், அசத்தினில் செல்கிலாச் சதுமுகத்தவற்கு - பொய்மார்க்கத்திற் செல்லுதலில்லாத பிரமனுக்கு, தாமம் - மகத்துவமுடைய, சத்திரம்செய்பவர் - யாகத்தைச் செய்பவர்களாய், பரந்தனர்-பரவினாகளாய், தாளத்தாமசததிரம் - முத்துமாலையணிந்த கைவேல், தயங்க - ஒளிர, சிததிரம்பொருந்தினர் - நானுவதையடைந்தனர். எ-று.

உஎஅ. தாமவிந்துமீதெழுநதவர்க்கிரட்டியினறகையர்
தாமவிநதுவினபிளவன்னதயங்குவாளெயிறறர்
தாமவிஞ்சையாகடப்பருநதகையினர்தரளத
தாமவிஞ்சையர்துவன்றினர்திசைதொறுந்தருக்கி. (ககஅ)

இ-ள் தாம் அவிந்துமீது எழுந்தவர்க்கு இரட்டியின் தகையர் - முன்னடந்தபோரிற் றமிறந்து விண்ணிற் சென்றவர்களுக் கிருபங்காகிய பெருமையையுடையவர்களாய், தாமம் இந்துவின்பிளவு அன்னதயங்குவாள் எயிறறர் - ஒளிபொருந்திய சந்திரனது பிளப்பைப்போல விளங்குகின்ற கூரிய பற்களையுடையவர்களாய், தரளத்தாம விஞ்சையர்கடப்ப அரும்தகையினர் - முத்துமாலைதரித்த வித்தியாதரர்கள் வெல்ல அரிய கவசமுடையவர்களாய், தாம் - தாவுகின்ற, அவிஞ்சையர் - மாயையுடையவர்களாய், தருக்கி - செருக்கி, திசைதொறும் துவன்றினர் - போர்க்களத்தி லெல்லாத்திசைகளினு நிறைந்தனர். எ - று.. (ககஅ)

உஎகூ. தாமடங்கலுமுடங்குளையாளியுந்தகுவார்
தாமடங்கலுநெடுந்திசையுலகெலாந்தகைவார்
தாமடங்கலுங்கடலுமொததார்தரும்பகையைத்
தாமடங்கலுங்கொடுஞ்சுடர்ப்படையெலாநதரிததார். (கககூ)

இ-ள். தாமடங்கலும் முடங்கு உளை ஆளியும் தகுவார் - தாவுகின்ற சிங்கத்தையும மடங்கிய பிடரிமயிரையுடைய யாளியையு மொப்பாவர்களாய், தாம் அடஙகலும் நெடும்திசை உலகு எல்லாம்தகைவார் - தாங்களெல்லாரும் நெடிய திசைகளையு முலகெல்லாவற்றையும் போரிற்றடுக்க வல்லாராய், தாமடங்கலும் கடலும் ஒத்து ஆர்தரும் பகையை - வலியுடைய வடவைத் தீயையுங் கடலையு மொப்பாகிப் போர்க்களத்தில் நிறைகி

ன்ற பகையை, தாமடங்கலும் கொடும் சுடர்ப்படை எல்லாம் தரித்தார் - வலியுடைய குரலாகிய இடியையுங் கொடிய பிரகாசமுடைய ஆயுதங்களெல்லாவற்றையுந் தாஙகினுர். எ-று. (ககக)

மாதலிஸ்ரீராகவபிரானுக்குச்சொலலியது.

உஅ0. வீககுவாயயிலவெளளெயிறறரவினவெவ்விடததைத
மாயககுமாநெடுமநதிரநதநதவோாவலியி
ஞேயககுநோயதருவினைசகுநினபெருமபெயாநொடியி
னீககுவாயுனைநினைக்குவாாபிறபபெனநீஙகுமம. (கஉஉ)

இ - ள். வீககுவாய் அயில்வெள் எயிற்று அரவின் வெவ்விடத்தை - கவவுகினறவாயில் கூர்மைபொருந்திய வெள்ளிய பற்களையுடையபாம்பினது வெவ்விய நஞ்சை,மாயக்குமாநெடு மந்திரம் தந்தது ஓர்வலியின - மாயக்கும விதததை நெடியமந்திரந் தந்ததாகிய ஒப்பற்றவலியா லவ்விடமழிந்தாற்போலவும, நின்பெரும் பெயர் நொடியின்-நினது பெருமைபொருந்தியதிருநாமத்தை யோதின், நோய்க்கும நோய்தருவினைக்கும் - பிணியையு மப்பிணியைத்தருகின்ற தீவினையையும, நீக்குவாய் உன்னை நினைக்குவார் பிறப்பு என்ன நீங்கும் - போக்குவாயாகிய உன்னைத் தியானிபபாரது பிறப்பைப்போலவும் அம்மாயநீங்கும். எ - று. (கஉஉ)

உஅ௩. துறததலாறறுறுஞானமாக்கடுஙகணைதுடர
வறததலாதுசெலலாதநலலறிவுவநதணுகப
பிறததலாறறுறுமபேதைமைபிணியபுறததமமை
மறத்தலாற்றநதமாயையினமாய்நததுமாயம. (கஉச)

இ - ள். பிறத்தல் ஆற்றுறும பேதைமை பிணிப்புற-பிறத்தலைச்செய்கின்ற பேதைமையாகிய அஞ்ஞானம் பற்ற, அறத்து அல்லாது செல்லாத நல் அறிவுவந்து அணுக - அறத்தினெறியல்லாதுவேறுநெறியிற் செலலாத நல்லறிவாகிய ஞானம் வரலும், தம்மைமறத்தல் தந்தமாயையின் - தம்மை மறத்தலைச் செய்த மாயையினைப்போல, துறத்தல் ஆற்றுறும் ஞானமாக்கடும் கணைதுடர - நீக்குதலைச் செய்கின்ற ஞானமாகிய பெருமைபொருந்திய வேகமுடைய வாளி துடர, மாயம்மாய்ந்தது- இராவணனசெய்த மாயம் வீய்ந்தது. எ - று. (கஉச)

உ அ உ. நீலங்கொண்டாரகண்டனுநேமிப்படையோனு
மூலங்கொண்டார்கண்டசராவிமுடிவிப்பான்
காலங்கொண்டாரகண்டனமுனனேகழிவிப்பான்
சூலங்கொண்டானண்டரையெல்லாந்தொழில்கொண்டான. ()

இ - ள். மூலம்கொண்டார - தலைமைபெற்றவர்களாகிய, நீலம்கொண்டு ஆர்கண்டனும் நேமிப்படையோனும் - கருமை கொண்டுநிறைந்த கண்டமுடையசிவனுஞ் சக்கிராயுதமுடைய நெடியோனும், கண்டகர் ஆவிமுடிவிப்பான்-அரக்கராகிய கண்டகாதுயிரை முடிவிக்கும்பொருட்டு, காலம்கொண்டார்-இக்காலத்தைக் கொண்டாராயினர், அண்டரை எல்லாம் தொழில் கொண்டான்-தேவர்களெல்லாரையுந் தொழில்கொண்ட இராவணன், முன்னேகண்டனகழிவிப்பான் - போர்க்களத்தில் தான் முன்னே பார்த்தசேனையை யழிவிக்கும்பொருட்டு, சூலம்கொண்டான் - சூலத்தைக் கைக்கொண்டான். எ-று. (கஉ௫)

உ அரு. கண்டாகுலமுற்றுயிரமாக்கின்றதுகண்ணிற்
கண்டாகுலமுறறும்பர்பதைக்கின்றதுகண்ணிற
கணடார்குலமுறறுஞ்சுடுமெனறக்கழலவெய்யோன
கண்டாவுதனமுன்செல்லவிசைத்துளளதுகணடான. (கஉ௬)

இ-ள். ஆயிரம் கண்டாகுலம் உற்று ஆர்க்கின்றது - ஆயிரஞ் சிறந்த மணிகள்கட்டி யொலிப்பதாய், உம்பர்கண்டு ஆகுலம் உற்றுபதைக்கின்றது - தேவர்கள் பார்த்துத் துன்பமடைந்து பதைக்கச்செய்வதாய், அக்கழல் வெய்யோன் – வீரக்கழலையணிந்த அவ்விராவணன், கண்ணில்கண்டார் குலம் முற்றும் சுடும் என்று - கண்ணாற்பார்த்தவரது குலமுழுதையுஞ் சுடுமென்று கருதி, கண் தாவுதல் முன்செல்ல விசைத்துள்ளது - கண் பார்ப்பதற்கு முன் செல்லும்படி விசைத்துள்ளதாய்,கண்டான்-அச்சூலம்வர ஸ்ரீராமபிரான் பார்த்தான் எ-று. (கஉ௬)

உ அச. சங்காரத்தார்கணடையொலிபபததழல்சிந்தப்
பொங்காரத்தானமாரபெதிரோடிபபுகலோடும
வெங்காரத்தான்முறறுமுனிந்தான்வெகுளிபபே
ருங்காரத்தாலுக்கதுபன்னூறுதிரளாகி. (கஉஎ)

இ-ள். சங்காரத்து ஆர்கண்டை ஒலிப்ப – கொலைத்தொழிலைப்பொருந்திய மணிகளொலிக்க, தழல் சிந்தப்பொங்கு ஆரத்

தான் - அக்கினிபோலச் சோதிசிதற விளங்குகின்ற இரத்தினு ரத்தையுடைய ஸ்ரீராமபிரானது, மார்பு எதிர்ஓடிப்புகலோடும்- அச்சூலம் மார்பெதிரோடிப புகுதலோடும, வெம்காரத்தான் முற்றும் முனிந்தான் - வெவ்வியகோவமுடைய அவ்விராம பிரான் முற்றுங் கோவித்து, வெகுளிப்போ உங்காரததால்-செ ய்த கோவமுடைய பெரியவுங்காரத்தால், பல நூறு உதிர் ஆகி உக்கது - பலநூறு உதிர்களாகிச் சிதறிற்று. எ - று. (௧௩௨)

௨அரு. வெனறேனெனறேயுள்ளமவியநதானவிடுசூலம
பொனறுனெனனிறபோகலதெனனுமபொருளகொணடா
னெனறுமுங்காரததிடையுகக்கோடுதலகாணு
நினறுனநநாளவீடணனுாசொனனிஙைவுறறுன. (௧௩௪)

இ-ள். பொனறுன் என்னில்-இராமன் சாகானுயின், விடு சூலமபோகலது எனனும் பொருளகொண்டான - விட்டசூலம் போகாதென்னும் பொருளைக்கொண்டு, வென்றேன் எனறே உள்ளம் வியந்தான் - வென்றேனென்று மனமுவந்து.எ-று. ()

௨அசு. சிவனேவலலனுனமுகனலலன்றிருமாலா
மவனேவலலனமெய்வரமெலலாமடுகினறுன
றவனேவெனனிறசெயதுமுடிகருநதரனலல
னிவனேதானவவேதமுதறகாரணனெனறுன. (௧௩௫)

இ-ள். சிவனே அல்லன்-பாதிப்பெண்ணுருமுதலிய குறிக ளில்லாமையாற் சிவனுமல்லன், நான்முகன் அல்லன்-நான்கு சிரமுதலிய வில்லாமையாற் பிரமனுமல்லன், திருமாலாம் அவ னே அலலன் – சங்குசக்கிரமுதலிய வில்லாமையால் திருமாலா கிய அவனுமல்லன், மெய்வரம் எல்லாம் அடுகின்றுன் - ஆயி னும் மெய்யாகப் பெற்ற வரங்களெல்லாவற்றையுமொழிக்கின் ருன். எ-று. (௧௩௫)

௨அஎ. மாமரத்தார்கையாலவருநதுவானையோா
தோமரத்தாலுயிர்துலைகததூணடினன
ருமரததாறபொராததகைகொள்வாட்படை
காமரத்தாறசிவனகாததுவாள்கொணடான. (௪௫௧)

இ-ள். காமரததால் சிவன்கரத்து – தானபாடிய இசைப் பாட்டால் சிவனது கரத்தினின்று, தாம் அரத்தால் பொராத

தகைகொள்-தாவுகின்ற அரத்தா லராவப்படாத பெருமைகொண்ட, வாட்படைகொண்டான் - வாளாயுதத்தை யுருவிய இராவணன், மாமரத்து ஆர்கையால் வருந்துவானை - பெருமைபொருந்திய வில்லாகிய மரத்தைப்பற்றிக கையால வருந்துகின்ற மாதலியினது, உயிர் - உயிரை, ஓர்தோமரத்தால் துலைக்கத்துண்டினன் - ஒருலகதைபாற் போக்ககருதி யதனைவிட்டான் எ - று. (கருக)

உஅஅ. மஞ்சரங்கியமார்பினுநதோளினும்
நஞ்சரங்கியகணணினுநாவினும
வஞ்சனமேனியைவாாகணையட்டிய
பஞ்சரமமெனலாமவகைபணணினை. (கசுஎ)

இ-ள். மஞ்சு அரங்கிய - ஆபரணங்களையணிந்த, வஞ்சன் - இராவணனது, மார்பினும் தோளினும் - மார்பினையுந தோளினையும், நஞ்சு அரங்கிய கண்ணினும் நாவினும் - விடம்பொருந்திய விழியினையு நாவினையும், மேனியை - உடலையும், வார்கணை அட்டிய பஞ்சரம் எனல் ஆம்வகை பண்ணினான் - நீண்டகணைகளை நிறைத்த கூடென்று சொல்லலாகும் விதஞ்செய்தான். எ-று. (கசுஎ)

உஅக. முக்கோடிவாணாளுமுயனறுடையபெருந்தவமுமுதல்வன்முன்னாளெக்கோடியாராலுமவெலபபடாயெனககொடுததவரமுமேனைத திக்கோடுமுலகனைததுஞ்செருக்கடந்தபுயவலியுநதின்றுமாராபிற புககோடியுயிர்பருகிப்புறம்போயிறறிராகவன்றன்புனிதவாளி. ()

இ-ள். எககோடி யாராலும் வெலப்படாய் என-எல்லாத்திக்கிலுமுள்ள வெல்லாராலும் வெல்லப்படமாட்டாயென்று, முன்னாள் முதல்வன - முன்னாளிற் பிரமன், கொடுத்தவரமும்-கொடுத்தவரத்தையும், முககோடி வாழ்நாளும் முயன்று உடைய பெரும்தவமும் - முக்கோடி வாணாளையும் முயன்று பெற்றுடைய பெரியதவத்தையும், (ககஎ)

உக0. தோடுழுதநறுநதெரியற் றெருகையுழுதகிளைவண்டின் சுழியத்தொங்கற், பாடுழுதபடர்வெரினின் பணியுழுதவணிநிகர்ப்பப்பணைக்கையானைச, கோடுழுதநெடுந்தழும்பின் குவைதழுவியெழுமேகக்குழுவின்கோவைக், * காடுழுதகொழும்பிறையிற்கறைகழன்றுகிடந்தனபோற்கிடக்ககண்டான். (உ0௬)

- இ-ள். தோடு உழுதநறும் தெரியல்தொகைஉழுத - இதழ்க ள் நெருங்கிய நறுவியமாலைத்தொகையிற் பரவிய, இளைவண்டின் சுழியத்தொங்கல் - கூட்டமாகிய வண்டினையுடைய சிகையில ணிந்தமாலை, பாடு உழுதபடா வெரினின் - படுதலைச்செயத படர்ந்த முதுகின், பணிஉழுத அணிநிகர்ப்ப - தொழிலமைந்த ஆபரணத்தை யொப்பாக, பணைகையானை-பருத்த காமுடைய திசையானைகளினது, கோடு உழுத நெடும தழும்பினகுவை தழுவி - கொம்புகளழுந்திய நெடிய தழும்பின் கூட்டத்தைத் தழுவி, எழுமேகக்குழுவின் கோவைககாடு உழுத கொழும்பி றை - நீருண்டெழுகின்ற மேகக்கூட்டத்தின் வரிசையாகிய கா ட்டிற்பதிந்த கொழுமையான பிறைகள், கறைகழுன்று கிடந்த னபோல் - உட்கறுப்பு நீங்கிக் கிடந்தாற்போல, கிடககககண டான்-அக்கோடுகள்கிடகக ஸ்ரீராமபிரான் பார்த்தான். எ-று.()

விபீடணாழ்வானகூறியது.

உகக. வீரநாடேறுயோவிரிஞ்சனுயாவருக்குமேலாமனனை
　　பேரநாடேறுயோபிறைசூடுமொருவனறனபுரம்பெற்றுயோ
　　வாரணுவுனனுயிரையஞ்சாதேகொண்டகனாுரநெலாநிறக
　　மாரனாவலியாடடநதவிாந்தாரேருளிர்நதானேமதியமெனபான்.()

இ-ள். ஆர் அண்ணு உன்உயிரை அஞ்சாது கொண்டு அக ன்ருர - அண்ணு ஆருனதுயிரையஞ்சாமற் கொண்டுபோனர்,

---

## ௬௫-வது. மீட்சிப்படலம்.

:0:

## ஸ்ரீராமபிரான் இராவணனைக்கொன்று பிராட்டியோடு திருவயோத்திக்குமீண்டதையுணர்த்துகின்றபடலம்.

---

பிரமனதுதி.

உகஉ. பகுதியெனறுளதியாதினும்பழையதுபயந்த
　　விகுதியால்வந்தவினைவுமறறதற்குமேனின்ற
　　புகுதியாவாககுமரியவபபுருடனும்நீயிம
　　மிகுதியுன்பெருமாயையினுலவநதவீககம்.　　(௪௦௦)

இ-ள். பகுதியென்று உளது இயாதினும பழையது-மூலப் பிரகிருதியென்று சொல்லப்பட்டதாகிய எதனினும் பழமையா

ணது, பயந்த விகுதியால் வந்த விளைவு - அம்மூலப்பிரகிருதி தந்த விகாரத்தாலுண்டாகிய சகமுதலாகிய விளைவுகளாம், அத ற்குமேல் நின்ற - அவ்விகுதிக்குமேனின்ற, புகு-நுழைகின்ற, தீ-ஞானமுடைய, யாவர்க்கும அரிய அப்புருடனும் நீ - எல்லா ர்க்கு மறிதற்கரிய அந்தப் பரமபுருடனும் நீ, இம்மிகுதி உன் பெருமாயையினால் வந்தவீக்கம் - இவ்விரிவு உனது பெரியமா யையினால் வந்த விரிவாம. எ - று. (க00)

பிரமனதுதி.

உகங. எனக்குமெணவகையொருவறருமிமையவர்ககிறைவன
றனக்கும்பலபெருமுனிவாகரு முயிருடனறழீஇய
வனைநதினிற்குமநீயேபரமெனபதையறிநதார்
வினைததுவககுடைவீடடருநதலைநினறுமீளவாா. (க0௨)

இ - ள். வினைத்துவககு உடைவீட்டு அருந்தலை நின்று மீள்வார் - இருவினைதது வக்குடைய விடுதலரிதாகிய விலங்கி னின்றும் நீங்குவார் (க0௨)

உகச. இடையுவாவினிறசுவேலமஉந்திறுநதெயிலிலங்கைப
புடையவாவுறசசேனையவளைபபுறபபோககிப
படையைவீழவுறுமரககாதஙகுலமுறறுமபடுததுக்
கடையுவாவினிலிராவணனறனனை ங்கட்டு. (கஙஅ)

இ-ள். பௌர்ணமியில் சுவேலாசலஞ்சேர்ந்து இலங்கை யைச் சூழ்ந்து அரக்கர்குலத்தை முழுதுமடிததுஅமாவாசையி லிராவணனையுங் கொன்று, (கஙஅ)

உகரு. வஞ்சரிலலையிவ்வண்டததினெனும்படிமடிதத
கஞ்சநாண்மலாககையினுயனனைசொற்காறு
மஞ்செரடஞ்சுநாலொனறெனுமாணடுபோயமுடிநத
பஞசமிப்பெயாபடைததுளதிதியின்றுபயநத. (கஙக)

இ-ள். அன்னைசொறகு ஆறும் - தாயாகிய கைகேசிசொல் லுக்களவாகிய, (கஙக)

உகசா. அண்டமேபோனறதையன்புட்பகமண்டத்தும்ப
ரெணடருஙகுணங்களின்றிமுதலிடையீறின்றுஙிப்
பண்டைநான்மறைககுமெட்டாப்பரஞ்சுடர்பொலிவதேபோற்
புணடரிககணகென்றிப்புரவலன்பொலிநதானமனறே. (சருக)

இ-ள். எண்தரும் குணங்கள் இன்றி - எண்ணத்தக்க தீய குணங்களில்லாமல், (க௫௬)

ஸ்ரீராகவபிரானபிராட்டிககுசசொலலியது.

உ௬எ. சிரதது வாசவணடலமபிடு தெரிவைகேளிதுநீ
டரதது வாசவாவேள்வியாதணடகமதுபான
வரதது வாசவனவணஙகுறுசிததிரகூடம
பரதது வாசவனுறைவிடமிதுவெனபபகாநதான. (க௭௬)

இ-ள். சிரதது வாசவண்டு அலமபிடு தெரிவைகேள் - சிரசில் மணமபொருந்திய வண்டுகள் தேனுணடொலிக்கின்ற பெண்ணேகேள், இது நீளதரத்து உவாசவா வேளவியர் தண்டகம் - இவ்விடம மிகுந்த வலியுடைய உபாசனை செய்பவர்களும் யாகங்களைச் செயபவாகளும வசிக்கின்ற தண்டகவனமாம், அது வரத்துவாசவன் வணங்குறு சித்திரகூடம - அது சிறப்புடைய இந்திரன் வணங்குகின்ற சித்திரகூடமாம், இது - இவ்விடம், பரததுவாசவன் உறை இடம் எனப்பகர்ந்தான்-பரத்துவாசமுனிவன் வதிகின்றவிடமெனச்சொனனான். எ-று. (க௭௬)

இதுவென்று மதுவென்றும் பின்பிதுவென்றுஞ் சுட்டிய தென்னை யெனினிதுவென்று சுடடியதைக கூறி யது வென்று சுட்டியதைக கூறுங்காலே விமானமவ்விடத்தைககடந்து பரத்துவாசவனுறை விடம்போனமை பறறியென்க.

உ௬அ. எட்பகததினையளவையுஙகருணையோடிசைநத
நட்பகததிலாவரககரைநறுககிமாமேரு
விட்பகததுறைகோளரியெனபபொலிவீரன
புட்பகததினைப்பதிகெனநினைநதனனபுவியில. (க௭உ)

இ-ள். எண்பகத்தினை அளவையும் கருணையோடு இசைந்த- (அருளுடையோராது) மனஙகுலையத்தினையளவுங் கருணையோடு பொருந்திய, நட்பு அகத்து இல்லா அரக்கரை நறுக்கி - அன்பு மனத்திலில்லாத இராவணன் முதலிய அரககர்களைத்துண்டஞ் செய்து, மாமேரு விட்பகத்து உறைகோளரியெனப் பொலிவீரன்-பெருமைபொருந்திய மேருமலையினது குகையினிடத்தில் வதிகின்றவலியமைந்த சிங்கம்போல விளங்குகின்ற இர்குநா

தன், புட்பகத்தினைப் புவியில்பதிகென நினைந்தனன் - புட்பக விமானத்தைப் புவியிலிறங்குக வென்று திருவுள்ளங்கொண் டான், எ - று. (கஅஉ)

## ௩௬-வது. திருவபிடேகப்படலம்.

:0:

௨௯௯. அரிடணையனுமனருங்கவஙகதனுடைவாளேந்தப்
பரதனவெணகுடைகவிக்கவிருவருமகவரிவீச
விரைசெறிகுழலியோங்கவெண்ணையூர்ச்சடையன்றங்கள்
மரபுளோாகொடுக்கவாங்கிவசிட்டனேபுனைந்தானமௌலி. (௩௭)

இ-ள். விரைசெறி குழலிஓங்க - வாசம் நெருங்கிய அளகத்தையுடைய சானகிபிராட்டிவிளங்க. (௩௭)

௩௦௦. வெள்ளியும்பொனனுமெனபோாவிதிமுறைமெயயிறகொண்ட
வொள்ளியநாளினல்லவோரையினுலகமூன்றுந
துளளினர்குனிப்பமௌலிசூடினனகடலினவநத
தெள்ளியதிருவுந்தெயவபபூமியுஞ்சேருநதோளான். (௩௮)

இ - ள். வெள்ளியும் பொன்னும என்போர் - சுக்கிரனும் பிரகற்பதியு மென்போர், (௩௮)

௩௦௧. பனனெடுங்காலநோறறுததன்னுடைப்பண்பிற்கேற்ற
பினனெடுங்கணவனறனனைப்பிரிநதிடைப்பெறறுமுறறுந
தன்னிடையாசையாரத்தழுவினளிருகைதாஙகி
நன்னெடும்பூமியென்னுநஙகைதனகொங்கையோடும். (௪௦)

இ-ள். பல்நெடும் காலம் நோற்று - பலநீண்ட காலங்கள் தவஞ்செய்து, பின் - பின்பு, தன்னுடைப் பண்பிற்கு ஏற்ற- தன்னுடைய பொறுமையாகிய குணத்திற்கேற்ற, (௪௦)

# ௯௭ - வது. விடைகொடுத்தபடலம்.

## சுக்கிரீவன்றொடக்க மார்யோர்க்கு விடைகொடுத்ததைக் கூறுகின்றபடலம்.

———o:———

௯0௨. அங்கதமிலாதகொற்றதண்ணலுமகிலமெல்லா
மங்கதனென்னுநாமமழகுறத்திருத்துமாபோ
லங்கதங்கன்னறுகேளாற்குடனகொடுத்ததனையங்தான
அங்கதனபெருமைமணமேலாரறிந்தறைபகிறபார். (௧௮)

இ-ள். அங்கதம் இலலாத கொற்றதது அண்ணலும-வசை யில்லாத வெற்றியையுடைய ஸ்ரீராகவபிரானும, அகிலம எல லாம - பூமியிலெங்கும், அங்கதன என்னும் நாமம அழகுறத திருத்துமாபோல - அங்கதனெனனுமபெயர காரணக்குறி யென அழகுபெற அப்பெயரையே திருத்தும் விதமபோல, அ யன் - பிரமன, கன்னல் தோளாற்கு கொடுத்த - இக்குவாகுமக ராசனுக்குக் கொடுதத, அங்கதம, தனை - தோளணியை, ஈங தான் - அங்கதனுக்குககொடுததான, அங்கதன் பெருமை மண மேல் ஆர் அறிந்து அறையகிறபார - அங்கதனது பெருமை யைப் புவியில் யாரறிந்து சொலலுவார். எ-று. (௧௮)

அங்கு அதன்பெருமை - அவவிடததி லததோளணியின மகிமையையெனினுமாம.

௯0௩. பதவலிச்சதங்கைபைந்தாரபபாய்பரிபணைத்திணகோட்டு
மதவலிச்சயிலம்பொறபூணமாமணிககோவைமுதது
முதவலிறறகவவன்றியிலலனவுளளவெல்லாரு
சதவலிதனக்குததந்தானசதுமுகததவனைததநதான. (௨௫

இ-ள். சதுமுகத்தவனைத் தந்தான - பிரமனையீன்ற ஆதி பகவனாகிய ஸ்ரீராமபிரான, பதமவலலிச்சதங்கை-காலிற்கட்டு கின்ற பூங்கொடியையொத்த சதங்கைகளையும, பைந்தார்-பசிய மாலைகளையு மணிந்த, பாய் பரி பணைத்திண் கோட்டு மதவலிச் சயிலம்-பாயகின்ற குதிரைகளையும் பருத்தவலிய கொமபையும் மதத்தையும் வலியையுமுடைய யானைகளையும, பொன்பூண் மா

மணிகோவை முத்தும் - பொன்னாலாகிய ஆபரணங்களையும் பெருமைபொருந்திய இரத்தினமாலைகளையும் முத்துக்களையும், உதவலில் தகைவ அன்றி இல்லன உள்ள எல்லாம் - கொடுத்த லிற் றகைவனவன்றி யில்லனவாகிய வுள்ள வெல்லாவற்றை யும், சதவலி தனக்குத்தந்தான் - சதவலியென்பவனுக்குக் கொடுத்தான். எ-று. (௨௫)

௩௦௪. பேசரிதொருவர்க்கேயும்பெருவிலையிதனுக்கீதுக்
கோசரியிலதெனறெண்ணுமொளிமணிப்பூணுந்தூசு
மூசெரிக்குவமைமும்மைமும்மதகளிறுமாவுங்
கேசரிதனக்குமீயந்தானகிளாமணிமுழவுக்தோளான. (௨௬)

இ - ள். கிளர்மணிமுழவுத்தோளான்-விளங்குகின்ற அழகுடைய முழவையொத்த தோளுடைய ஸ்ரீராகவபிரான், இதனுக்கு பெருவிலை ஒருவர்க்கேயும் பேசு அரிது-இதனதுமிக்க விலையை யொருவராலுஞ் சொல்லுதலுககரிது, ஈதுககுசரி இலது என்று எண்ணும் - இதனுகசொன்று மொப்பிலதென்று மதிக்கின்ற, ஒளிமணிப்பூணும் தூசும் - விளங்குகின்ற மணியணிகளையும ஆடைகளையும், மூசு எரிக்கு உவமை மும்மை மும்மதக்களிறும் - மொய்க்கினற அக்கினிக்குச்சினத்தால் மூன்றுமடங்கொப்பமைந்த மூன்றுமதங்களையுடைய யானைகளையும், மாவும் - குதிரைகளையும், கேசரிதனக்கும் ஈய்ந்தான்-கேசரிக்குங் கொடுத்தான். எ - று. (௨௬)

௩௦௫. அனுமனைவாலிசேயைச்சாமபனையருக்கன்றந்த
கனைகழறகாலினானைக்கருணையங்கடவுணோக்கி
நினைவதற்கரிதுநுமமைப்பிரிவெனறனீவிரவைப்பு
மெனதனுகாவறகினறெனனேவலினேகுமெனறன. (௩௨

௩௦௬. இலங்கைவேந்தனுக்குமிவ்வாறினியுனயாவுங்கூறி
யலங்கலவேனமதுகையணணல்விடைகொடுததருளலோடு
நலங்கொள்பேருணர்வினமிக்கோாநலனுறுநெஞ்சர்பினனர்
கலங்கலரேயசெய்தலகடனெனக்கருதிச்சூழ்ந்தார். (௩௩

௩௦௭. பரதனையிளையகோவைச்சத்துருக்கனனைப்பண்டை
விரதமாதவனைத்தாயர்மூவரைமிதிலைப்பொன்னை
வரதனைவலங்கொண்டேத்திவணங்கினர்விடையுங்கொண்டே
சரதமாநெறியுமவல்லோர்தததமபதியைச்சார்ந்தார். (௩

